உ

கடவுள் துணை.

# போகமுனிவர்

திருவாய்மலர்ந்தருளிய

# வைத்தியம் - எ.

இவை

திருத்தணிகை

ஆறுமுகதேசிகரவர்களால்

பார்வையிடப்பட்டு,

---:o:---

ஆதிபுரி

இரத்தினவேலுமுதலியாரது

வாணீவிலாஸஅச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1908.

சென்னை நாராயணமுதலிவீதி 52-வது நெ-வீடு.



உ

கடவுள் துணை.

திருச்சிற்றம்பலம்.

# போகமுனிவர்

திருவாய்மலர்ந்தருளிய

## வைத்தியம் - எ௱.

பாயிரம்.

கடவுள்வணக்கம்.

எண்சீர்க்கழிநெடில விருத்தம்.

திருவளர்மூலாதார *முன்னோன்பாதம்
செப்புசுவாதிஷ்டான 0 வேதன்பாதம்
மருவுமணிப்பூரகஞ்சேர் ‡ மாயன்பாதம்
மன்னுமநாகத வுருத்ரவண்ணன்பாதம்
உருவளர்விசுத்தி மகேச்சுரன்றன்பாதம்
உண்மையோடாக்கினையின் சதாசிவன்றன்பாதம்
குருவளருநாதாக்கள் பாதம்போற்றிக்
கூறுகிறேன்வயித்தியகுசூக்ஷந்தான்பாரே.

நூல்.

பாரப்பாபெருநூல்தான் மூன்றுகாண்டம்
பாடினேன்னதைக்குறுக்கி யேழுநூறு
சேர்ப்பாவாதமொடு ஞானமார்க்கஞ்
செப்பரியவயித்தியமு மஷ்டகர்மம்
ஆரப்பாவகைவிவர மாகச்சொன்னார்
அறியாதமாந்தரிதையறிவீர்நன்றாய்
நேரப்பாகருக்குருவுந் திறந்துசொன்னேன்
நிகழ்த்தரியநூல்களுக்குத் திறவுகோலே. க

திறவுகோலாகவேதான் பாடிவைத்தேன்-செப்பரியசித்தரென்னை பேச்சிககொண்டு, மறைவின்றிவெட்டவெளி யாகச்சொன்னார்-மகத்தானபிரமமுனி யென்றேயெண்ணி, உறவாடிநூல்வாங்கி யொளித்தார்சித்தர்-ஓகோகோமோசம்வந்த தென்றுசொல்லித் திறமாகஅவருடனேதர்க்கம்பேசிச்-செயலாகநூல்வெளியாய் வாங்கினேனே. உ

* முன்னோன் விநாயகன், 0 வேதன்-பிரமன், ‡ மாயன்-விஷ்ணு.

வாங்கியேயுலகத்தோர் பிழைக்கமைந்தா-வளமானசரக்கினங் கட்டினமுங்கூட, தாங்கியேநீற்றினமாத் திரைசெந்தூரம் - தயங்காத லேகியங்கள் திருத்தக்கற்பம், காங்கியேதிராவகமுய செயநீர்கற்பம்- களங்கொடுங்கலங்களு சூரணங்கள், பாங்கியேகியாபூப்போக் குடனேயெல்லாம்-பண்பாகக்கருக்குருவு முரைக்கக்கேளே. ௩

கருவென்னபூமியிட நாதம்விட்டால்-காணரிதுவாதமொடு வயித்தியஞ்செய்ய, கருவென்னபூமியிட நாதம்பூநீர்-கானல்மிகு முவர்க்காட்டிறகுடிலசைகட்டி, கருவென்னதைமாசி பங்குனியிலெல்லாங்-காத்திருந்தேயுவர்ப்பூவை வாரிவந்து, கருவென்னபாண்டத்திலிட்டுமைந்தா-கனமுடகசுத்தசலந் தன்னைவாரே. ௪

வார்த்துமேகலக்கியபின் தெளிவைவாங்கி-வாமானபுத்தோட்டில்மகிழ்ந்துவாரு, வார்த்துமேரவிதனிலேகாயவைத்து-மறுபடியுஞ்சுத்தசலந்தெளித்துப்பாரு, வார்த்தவுடன்புத்தோட்டி லிறக்கிலுப்பாம்-மறுபடியுஞ்சுத்தசலை முன்போல்வாரே, வார்த்துமேதெளிவிறுத்துரவியிற்காய-வைத்துநன்றாய்ப் பத்துமுறைவளமாச்செய்யே. ௫

செய்தபின்னரின்னமொரு சூட்சங்கேளு-சிறப்பாகமுன்போலச் சலத்தைவிட்டுப்,பெய்தவுடன்பாண்டத்திற் றமர்தான்போட்டுப்-பெட்டுடனே * கதம்பைவைத்துகீழேசட்டி, நெய்யவேவைத்துநடுக் கதம்பைமேற்கு- நிற்கவேயுத்திரமாய் வைத்துமூடு, துய்யவேகதம்ப யிடமேக்கால்மிங்க-சுத்தசலமாசின்றி யிறங்கும்பாரே. ௬

*கதம்பை-பருப்புல்லின்றூள் அல்லது வைக்கோற்றூள்வைக்கவும்.

இறங்கியதோர்சலமதனை ரவியிற்காய்த்து-எடுத்திடவேவ்வாதத்துக்காதியுப்பாம், அறங்கியேயிதைவிட்டுப் பூநீர்வாரி-யப்பனேகரைத்தனைக் காடசிக்காய்ச்சி, இறங்கியேகல்லுப்புச் சுண்ணமிட்டு-எண்ணமிட்டுச்சவர்க்காரமாச்செய்க்கன்று,உறங்கியேபார்த்ததிலே லென்றுநகாணு-தோகோகோ கெட்டலேவார்வாதிதானே. ௭

அலையாதேமுப்பூவின் குணத்தைக்கேளும்-ஆதியாங்கல்லுப்புப் படிதான்ரண்டு, சிலையான அப்பூரிவிட்டுக் கரைத்துநன்றாய்த்- தெளிவிறுத்துரவிதனிலே வைக்கிலுப்பாம், பலையாகத்தயிப்படியே முறைதான்பத்து-வாங்கியேபிரமாந்தகல் லுச்சுண்ணம், அலையாதேபடியொன்று பாண்டத்திட்டு-அதில்வாரு *ஏறலென்றசிப்பிநீரே. ௮

* ஏறல்-கிளிஞ்சல்,

சிப்பிநீர்வார்த்ததனைக் கரைத்துநன்றாய்த்-திறமாகரவியிலிட்டு ப்படருமுப்பூ,ஒப்புறவாயுப்பதனைப் பின்னுங் கரு- உத்தமனேபத் துமுறைதப்பாதேசெய், செப்பியேமுப்பூவும் வளரும்பாரு சித்தர் செய்யுமுறை நயிதுதான் செய்யொண்ணாது, அப்பியேமுப்பூவைக்கல் வத்திட்டு-ஆட்டுவாய்முன்சிப்பி நீரில்காணே. ௯

காணவேஆட்டியதைவில்லைதட்டி-காம்பிரமாய்ரவியுலர்த்தி யோ ட்டிலிட்டு, பூணவேசீலைசெய்து புடத்திற்போட்டு-புனிதமாயெடுத் துமுன்போற்கல்வத்திட்டு, தோண வயாட்டிவில்லை தட்டிககாய்த் துத்-துரிதமாபோட்டினிலிட்டோடுமுடி, காணவே * குக்குடத்தி ன்புடந்தான்போடு-கனமாகமுப்பூவுங் கட்டிப்போச்சே. ௰

*குக்குடபுடம்-கோழியளவுபுடம்.

போச்சென்றமுப்பூவும்வாதுடாச்சு- புகழானவயித்தியத்துக் காதி டாச்சு, ஆச்சநென்றவயித்தியங்கள்செயயும்போது- அறைகின்றேன் லேகியங்கள்தைலமீறாய், வாச்சென்றகட்டினங்க ளுருக்கினங்கள்-ம கத்தானநீற்றினமாத் திமைரசெந்தூரம்,கூச்சென்றயிமமுறைகள் செ ய்யும்போது-குருவிலொருகாசெடைதான் போட்டுச்செய்யே. ௧௧

காசெடைதான்குருப்போட்டுச் செய்தாயானால்-கண்காணுந்தோடு மடா நோய்கள்யாவும், கூசாதேவாதியென்றால் செய்வரன்பாரு- கூ றுகெட்டவயித்தியனே செய்யப்போறான், வாசியேமுப்பூவைச் செ யாவிட்டால் மைந்தனேபூநீரு என்றபோது, தேசியேபதினாறு தரந் தான்சுத்தி செய்தபின்புவயித்தியத்தைச்செய்துபாரே. ௧௨

செய்திடவேதீராத நோய்தானுண்டோ-செப்புகிறேன்முப்பூவின் வேதைமார்க்கம், செய்திடவேமுப்பூவைக்கல்வத்திட்டுச்- சேர்த்திடு நீயடரு *வெள்ளைவர்க்கம்பாலு, செய்திடவேயிரண்டுமொன்றாய் ப்-பீங்கானிட்டுச் செயலாக்ச்சுட்டுனேருமாசுபோடு,ஐப்துடனேயொ ருசாமம்ரவியில்வைக்க- அப்பனேமுறிந்ததுவும் சலமுமாமே, ௧௩

* வெள்ளைவர்க்கம் வெள்ளெருக்கம்பால்,

சலமானகடுங்காரச் செய்யநீர்விட்டுச் சார்ந்தரைததுமுப்பூவின் வில்லைதட்டி,உலரவேரவிதனிலேகாயவைத்து- ஒட்டிலிட்டுமேலோ டுமூடல்செய்து, கலவானகுக்குடத்திலிட்டுவாங்கிக்- கசக்காதேமூன் றுமுறைபரைத்தரைத்து, அலரவேமூன்றுதரம் போட்டுவாங்கு- அழிபாதசவர்க்காரச்சுண்ணமாச்சே, ௧௪

சுன்னமென்னசவர்க்கார வழலைதொட்டுச்-சொல்லுகிறேன்கடுங்கா ரக்குருவதாக, தன்னமென்ற * நாதவிந்துமுதற்றரந்தான்-அல்லாட்டால் இரண்டாவதல்லான்மூன்று, பன்னமென்றநோயில்லாச் சிவந்தமேனி-பார்த்துநாதத்தைவாங்குவாங்கு, கன்னதொருநாதந்தா நிறங்கவேண்டின்-கற்பூரச்சிலாசத்துச் சுண்ணம்பண்ணே. கரு

பண்ணியேதாம்பூல மருந்தச்சொல்லு-பரிவானமனவெல்லங்தேங்காயூட்டு, பண்ணியேநாதமது இறங்குமெத்த - நலமானபீங்கானில் வாங்கிக்கொண்டு, உண்ணியேசலமாகக் கற்பூரம்போடு-உன்னுடை யவிச்தொருகா செடைதான்சேரு, அண்ணியேமுறிந்ததுவுஞ் சலமாய்றிற்கும்-அதிலிடவுமருந்துவகை யறையக்கேளே, கசா

அறைகிறேன் வீரபொன்று புனுகுபூரம்-அப்பனே * குருவண்டு வூரமுஞ்சூதம், கறையான ஆறுபுள்ளி வண்டின்முட்டை ○ கருநாவி வகைவகைக்குப் பணந்தான் தூக்கு, உறையாகப்போட்டதிலே போட்டுமெத்தி-புத்தமனேகைப்பட்டால வெந்துநீறும், கறையாதேகுச்சியிட்டுமத்தித்தப்பா-கதிரோன்முன்வைத்தெடுத்துக்கருதிக்கேளே;()

* குருவண்டு-துவரஞ்செடியி லிருக்கிறவண்டு

○ கருநாவி-கறுப்புநாபி,

கருதியேசுவர்க்காரத் தூட்டியாட்டிக்-கசகாதேஇல்லைதட்டி ரவியில்வைத்து, அருதிரோரவிதனிலேயிட்டுவாங்கி * ஐந்துகண்ணகருகைக்குள்ளேவைத்துமூடு, சுருதியேபதின்மேலே சுண்ணச்சீலை-சுற்றிரவிமுகந்தனிலே யுலர்த்திப்பின்பு, பருதிரோபத்தெருவிற் புடத்தைப்போடு-பக்குவமாயாறவிட் டெடுத்துவாகதே, கஅ

* ஐந்து சுண்ணச்குகை கடல்நுரைச்சுண்ணம், [illegible]சிற்சுண்ணம், குக்குடச்சுண்ணம், வலம்புரிச்சுண்ணம்,வெள்ளைக்கற்சுண்ணம், ஐந்துங்கூட்டிககுகைசெய்தல்,

வாங்கியேமுன்னிரா லரைத்துக்கட்டி-வாகானசுண்ணம்புக் குகையில்வைத்துப், பாங்கியேமுன்போலப்புடைத்துப்போடு-பதனுமலாறவிட்டெடுத்துவாங்கு, ஆங்கியேயெடுத்ததனைக் கல்வததிட்டு-அப்பனேமுன்போற்று ளரைத்துப்போடு, காங்கியேயிப்படியே யனாத்தரைத்துக்-கைம்முறைபாயைந்துதரங் கணக்காய்ப்போடே. கசூ

போட்டெடுக்கவழலையென்ற சுண்ணமாச்சு - புகலுதற்குநாவுண்டோபவுண்டோசொல்,காட்டுமுன்னே கடுங்காரபணந்தங்கேளு-ீ

னகமென்றபரிசுண்ணம் வீரச்சுன்னம், ஆட்டுமேபூரத்தின் சுண்ணம்போடு- அழகானசாரமொடு சீனச்சுண்ணம், திட்டுமென்ற வகைவகைக்குக் காசெடைதான்-சேர்த்துசெப்புமுன்னீரா லரைத்துவில்லைதட்டே, உ௰

வில்லைதட்டிரவிதனிலேயுலரவைத்து-வேதித்துக் கடுஞ்சுண்ணக்குகையிலிட்டு,தொலலேயெதுமில்லையப்பா சுண்ணச்சீலே-சுற்றியேகுக்குடநற் புடத்தைப்போடு, எல்லையற்றவீசனுக்கு மெட்டாவித்தையேகாந்தவெளியாகச் சொன்னேன்சொன்னேன், கல்லோடுமண்மரங்களுருவிப்பாயுங்-காட்டுமுன்னேயண்டரண்டம் வேகும்பாரே, உக

வேகுமடாநவலோக நவரத்னங்கள்-விஷமானபாஷாணம் * அறுபானன்கும், வாகுமெபெறும்லவணவஉக யிருபத்தைந்தும்-மைந்தனே ○ யுபரசங்களூற்றிரண்டுபத்தும், பாகுமேசொன்னதொருசரக்கெல்லாந்தான்-படுமுன்னேகட்டாய்ங் கருக்குருவுமாகும்,பாகுமேதுரிசியதுவெந்துநீரும் படுமுன்னேநவாச்சாரங் கட்டிப்போமே, உஉ

* அறுபானன்கு-சுஅ-பாஷாணம்

○ உபரசங்கள்-௱உ௰,

யோமென்றசவார்க்காரச் சுன்னந்தொட்டுப்-போட்டிடவே சூதமதுவிரைந்துபோகும், ஆமென்றவழலைதொட்டுச் சுன்னங்கோடி-யழகனகட்டினமுருக் கிலங்கள்கோடி, தேனென்றமெழுகோடு களங்குகேடி செயநீராந்திராவகமுமதனிற்கோடி, கோனென்ற செந்தூரக்குளிகைகோடி-கொள்ளேயோ கொள்ளையதில்வாதந்தானே. உங

வாதந்தான்முன்பின்னுய்ச் சொல்லிவிட்டு-மறைந்தாரேநாதாக்கள் ரிஷிகள்சித்தர், வேதந்தான்முடிவுபடா வுப்பாய்நின்ற-வேதாந்தவழலையைத்தான் வெளியாய்ச்சொன்னேன், தீதறவேவெளிதோன்றச் சொன்னேனென்று - சித்தரெல்லாமென்மேலே சண்டைசெய்தார், வாதாடியவருடனே வலமாய்ப்பேசி- வாங்கினன்காணுலகத்தோர் பிழைக்கவென்றே. உச

உலகத்தோர்பிழைக்கவென்று சொன்னேனப்பா-உத்தமர்க்காம் கர்மிகளுக்குதவாதிந்நூல், உலகத்தோர்பாஷாண்டி மெத்தவுண்டு-உத்தமனேவயிற்பிழைக்க வேடங்கொண்டு, உலகத்தில்வேதாந்த குருநானென்று - ஓகோகோவாய்ப்பேய்ச்சல் மிரட்டுவார்கள், உலகத்தைக்குடிகெடுத்துப் பொருள்பறித்து-ஒன்றுமில்லையெனச்சொல்லியலேவார்பாரே, உரு

அலைந்தலைந்துமண்ணில்செடி பூண்டுந்தேடி-யறுபத்துநாற்சரகுஞ்சுட்டுசுட்டு, அலைந்தலைந்துதிரிந்தாலுமவாதங்காணா- அம்பரத்தினெறிகாணுக்கசடரப்பா, அலைந்தலைந்திந்தவண்ணஞ் சுட்டுச்சாவார் அப்பனேகோடானகோடியாந்தர், அலைந்தலைந்துவாதமொடு ஞானமுண்டு அறிந்திட்டபெரியோர்கள் சொல்வார்கேளே, உசு

சொல்வதுதான்சிவயோகியானுற்கேளு- சுந்தரமாஞ்சற்குருவை வணங்கிப்போற்றி, அல்லுபகலற்றமர்ந்தசோதிதன்னை-யாழ்ந்துமனம் பூரணமாயறிவோடுன்னு, வல்லமைகள்பேசாதேயறிவாய்நில்லு- வாமியென்றவாலையைத்தானிதமும்போற்று, கல்வியறிவுடைய பெரியோர்தம்பாதம்-காத்திருந்தால்வாதமுறை காட்டுவாரே. உஎ

காட்டுவார்வாதமொடு ஞானமார்க்கங்-கரைகாணவைட்டாங்கம்யோகாங்கந்தான், காட்டினுல்குருதொட்டிட காட்டவேணடுங் கைம்முறையுஞ்செய்ம்முறையுங் காணவேண்டும், சாட்டியில்லாப் பம்பரம்போ லாசான்சொல்லச் சாத்திரத்தைப்பார்த்தாலும்வருமோவாதம்-காட்டமிலாசான்சொல்லா லன்றிமாந்தர்-கோடிநூல்பார்த்தாலுங் கிட்டாதென்னே- உஅ

என்னவேகுருத்தேடி வாதம்பாரு- இல்லாட்டாலெந்நாலைக் குருவென்றெண்ணு, பன்னவேபதனமாய் வைத்துப்போற்று-பக்குவமாய்வந்தமுதல்வாசியாகும், கன்னவேஞானங்கம் வேதாங்கம்பார்-கைம்முறையாஞ்சவர்க்கார வழலைச்சுன்னம், என்னவேகருக்குருவும்வெளியதாக ஈந்திட்டேன்கண்ணாடிமுகம்போற்காணே. உகூ

கண்ணாடிமுகம்போலக் காணுமுள்ளங்-கைக்கனிபோற் றோன்றுமடா விந்நூல்வஞ்சம், புண்ணான பயல்களுக்குத் தோன்றாதப்பா பொருளறியாமூடருக்குக் கட்டொண்ணாது, பண்ணானபண்ணறியார்நூலீயாதே, பழையதங்கமென்றிதனைப் பதனம்பண்ணு, விண்ணானபேர்களுக்கே யீந்தாயானால் விண்ணிலிடிவிழுந்துதலை வெடிக்குந்தேறே. ௩0

தேறாதவாதமென்னவயித்தியம்பாரு-செப்பரிதுவைத்தியநூற் பிரமவித்தை, கூறான நூலறிந்து திறமாய்ச்செய்தால்- கூறவொண்ணா வாதத்துக் கொவ்வுமொவ்வும், ஆராயாதிதைவிட்டு வாதம்பார்ப்பாரதனாலேசெய்துநாம் பிழைப்போமென்றே, ஓராமல்பலகூட்டங் கூடியும் உள்ளாசைகொண்டலைந்தால் வாதம்வீணே. ௩க

வர்தந்தான்மனமடங்கி யறிவுக்குள்ளே - மற்றொருவரறியாமன் மவுனமாகப், போதந்தான்மனமென்ற வாய்வுதீட்சை-புகழானவாத மென்னுந் தீட்சையோடு,வேதந்தான்முடிவதுபோல் வாதஞ்செய்து விள்ளாதேபூசைக்குங் கற்பத்திற்கும், கோதின்றிப்பரதேசிக் கன்ன மிட்டுக்-கோயில்குளஞ்சாலைகட்டி யிருந்திடாயே. கூ௨

இருந்தீயாதுலகத்தில் வாழ்ந்தாயானால் எண்மேலேகுற்றமில்லை சாபமெய்தும், இருந்திட்டகாபத்தர் லெய்தும்ரோகம்-இதனாலேகே டுகெட்டு அலைவாய்நீயும், பிரிந்திட்டதேவியிட பூசைசெய்நீ-பிதற்ற தேசாராய வெறிகொள்ளாதே, மருந்திட்டமனமதுபோல்மதிகொள் ளாதே-வளமானசரக்குவகை சொல்லக்கேளே. கூகூ

சொல்லுகிறேனிலைப்பனையு *முத்தக்காசுஞ் சுயமானசிவன்வே ம்புதண்ணீர்மிட்டா, நல்லவொருவிலாமிச்சை வில்வவேரும்- நன்னா ரி ० குமரிவேரமுக்கறவேர், ஒல்கியநேர் ‡ சலந்திரட்டி மூவிவேரு ம்-ஓரிதழ்த்தாமரைக்கிழங்கும் வெட்டிவேரும், அல்லவேதாமரையி ன்வளையம்நெல்லி யால்விழுதுநீர்ப்பூலா வறுகம்வேரே. கூச

* முத்தக்காசு-கோரைக்கிழங்கு, ० குமரி-சோறறுக்கற்றாழை,

‡ சலந்திரட்டி-கொத்தான்.

வேரானவல்லாரை * வீழிசங்குமிளகரணை ०கொஉவேலி ‡கா க்கைவேலி; சீரானசிற்றாமல்லி சேராமல்லி- சிறுபுன்னையிருவேலி சி றுகாஞ்சோரி, தாரானதூதுவளை கண்டங்காலி - தடிப்பானநிலவா கைசிற்றாமுட்டி, வேரான்கருங்காலி நாவலத்தி-வெள்ளறுகுசிறுபிர ப்பங்கிழங்காமின்னே, கூரு

* வீழி-விழுது, ० கொடிவேலி- சித்திரமூலம்,

‡ காக்கைவேலி-உத்தாவணி

கிழங்கோடுகரிசாலை பொன்னாங்காணி-கெடியானவெள்ளைச்சா ரணையின்வேரும், சழங்கோடுநெரிஞ்சிலந்தை சூரியோடுசார் *சிவன் வேர்முந்திரிவேர் முருங்கைவேரும், வழங்கவேசுடுதூரத்தி முட்கா வேளை-மைந்தனேயகிலோடு ० மலாக்காகெந்தம், முழங்கவேமூலிவ கை நாற்பத்திரண்டு - முறையுடனே வகைவகைக்குப் பலந்தானேந் தே, கூசா

* சிவன்வேர்-சிவனார்வேம், ० மலாக்காகெந்தம்-மலாக்காசந்தனம்.

ஐந்தாகவிவைவெல்லா மிடித்துநன்றா - யடிகனத்தபாண்டத்திலி ட்டுக்கேளு; ஐந்தானவீரெட்டு மரக்காநீர்தா-னளந்துவிட்டு அடுப் பேற்றி யெரித்துக்காச்சு, நைந்திடவேபூசைசெய்தே யெடுத்துக்கொ

ண்டு-நலமாகவெட்டொன்றிற் பாதியாக்கி, மைந்தனேசிறுபாண்டம்
விட்டுக்காச்சி-வளர்காற்றில்தூற்றிமிக வாற்றிவையே, ௩௭

வைத்துமேயின்னமொரு செய்திகேளு-வளமானஆவின்பால்ப
டிதாளுலு, பொய்த்துமேபோகாமல் சொல்லக்கேளு *புடமேழுதீர்
ந்தசவட வன்னிகற்பம், வைத்துமேயிவையெல்லாம் பாண்டத்துள்
ளே-யாலிட்டுஅடுப்பேற்றி யெரித்துக்காய்ச்சி, வற்றியபின்னிரண்டு
படி யாளுப்பார்த்து வடிகொண்டுமுன்வைத்துக் கியாழத்தூட்டே(

ஏழுபுடம்போட்ட வன்னிகற்பப்-சாதிலிங்கம்.

ஊட்டடாவெள்ளாட்டுப் பால்தானென்று-உத்தமனே தேங்காய்
பால்படிதான்ரண்டு, ஊட்டடாபாலோடு கியாழமொன்று- ஊட்டி
வைத்தின்னம்வகை யுரைக்கக்கேளு,மூட்டடாசாதிக்காய் பத்திகிரா
ம்பு-முடிவானஏலமொடு வங்கங்கோஷ்டம், வாட்டடாகுங்குமப்பூ
கோரோசனைதான் வால்மிளகுகுகாசானி யோமமாமே. ௩௯

ஓமமொடுவாலுழுவை கூகைநீரு-உற்ற * விருசீரகமுந்திப்பிலி
மற்றும், வேமமார் o தாளிசம்வாய்-விளங்க ‡ மாஞ்சில்-வெட்பாலே
❋ திரிகடுகுதிப்பிலிமூலம், நாமமிகுமதிமதுரங் கொத்துமல்லி-நவாச்
சாரமிலவங்கப் பத்திரியுங்கூட, காமகொடுதக்கோலம் × தகரம்இந்
து-கசகசாமிஞ்சிட்டி சாரப்பருப்பே, ௪௰

* இருசீரகம்-கருஞ்சீரகம்-நற்சீரகம், o தாளிசம் -தாளிப்பத்திரி,
‡ மாஞ்சில்-சடாமாஞ்சில் அதேபெருங்கோரை, ❋ திரிகடுகு-சுக்கு
மிளகு-திப்பிலி, × நகரம்-தகரபபச்சிலே,

பருப்பான * திரிபலையும் சமுத்திராப்பழமும்-பகரரிய வலம்பு
ரிக்காய் கர்க்கடகசிங்கி, விருப்பானகாமப்பூ மகரப்பூவும்-விதமானசி
றுநாவற்பூவுங்கூட, கருப்பானசிற்றரத்தை பரங்கிப்பட்டை-கார்போ
கிபேரரத்தை கத்தூரிபட்டை, மருப்பானதாமரைக் கிழங்கும்அல்லி
கொட்டி-மரமஞ்சணிலப்பனைவேர் மரவள்ளிதானே. ௪௧

* திரிபலை-தான்றிக்காய், நெல்லிக்காய், கடுக்காய்.

வள்ளியாங்கிழங்குஞ்செங் கழுநீர்மூலம்-மாசற்றசெவ்வியதாமி
ச்திரபுஷ்டி, வள்ளியாம் * வேர்க்கொம்பு கடுகுரோணி-மகத்தானசி
றுதேக்கு சித்திரமூலம், வள்ளியாம்வகைக்குப்பல மொன்றுசொன்
னோம்-வளமாகஇளவறுப்பாய்ச்சூரணித்து, வள்ளியாம்வித்துவகை
சொல்லக்கேளு-வாகானஅத்திவித்து முருங்கைவித்மே, ௪௨

* வேர்க்கொம்பு-சுக்கு,

வித்தாமூமத்தைசடைக் கஞ்சாவித்து விதமான முன்னைவைத் துஅத்திவித்து, கத்தானசூரிவித்து, நெரிஞ்சில்வித்து-கருவேலின்வி த்தோடு மாதளையின்வித்தும், வித்தாம்பூனைக்காலி காணீர்முள்ளி-விளம்பாலின்வித்து நாயுருவின்வித்து, முத்தானகூவிளத்தின்வித்தி ன்னைந்தா முனையானகோதுமை யெள்ளுழுந்தே. எ௩

உழுந்தானகொம்மட்டி மாதளையின்வித்து உற்றதொரு ஆவரை வித்துங்கூட, கொழுந்தாய ? தற்றுன்வித் துஞாளிவித்தும்-கூந்தற் பணிவித்தோடு தாமரைக்காய்வித்தும், விழுந்தானஅரசம்பூவரசவி த்து-வெண்குன்றிவித்துசரக் கொன்றைவித்து, நழுந்தானதென்னை கருஞ் செம்பைவித்து-நலமானபுளியவரைத் தோலுங்கூட்டே, ௪௪

கூட்டுவாய்வாதுமைநற் கொட்டையோசி-குலமானமுந்திரியின் பருப்பேமடியாவும், கூட்டுவாய்வகைக்கு அரைப்பலந்தான்சொன் னேன்-குமுறவேயிளவறுப்பாய்ச் சூரணித்து, கூட்டுவாய்முன்மருந் தோ டொக்கச்சேரு-கூர்மையுள்ளபுலத்தியனே சொல்லக்கேளு, சே ர்த்திடுவாயின்னமொரு வகைதானப்பா குலவுநல்லதென்னம்பூ மு ருக்கம்பூவே. ௪௫

பூவோடுமகிழம்பூ விலுப்பைப்பூவும்-புங்கம்பூமாதளம்பூவில்வ ப்பூவும், மாவோடுகொங்கிலவு அத்திப்பிஞ்சு- மாசற்றசண்பகப்பூ * பாற்புரண்டி, சேவானபரித்திப்பூ வெள்ளிரிப்பூ-சிறுநெருஞ்சில் கா டாத்தி சிறுவிளாப்பூ, பாவானமுள்ளிலவு முருங்கைவரை - பருங் கொன்றைகருவிளா கருவேல்வேம்பே, ௪௬

* பாற்புரண்டி-சிறுஅம்மான் பச்சரி,

வேம்பானமாமரத்தின் பிசினோடொக்க - விளம்பினன்காண் வ கைவகைக்கு அரைப்பலமேலூட்டு-தேம்பாகநிழலுலர்த்திச் சூரணி த்துச் - சிறப்பாகமுன்மருந்தோ டொவ்வச்சேரு ஆம்பாகமாச்செய் தால்மோகதிக்காம் அதில்சர்க்கரைபலமிரண்டு அடைவாய்ச்சேரு, சோம்பாலேயிவையெல்லா மன்பாய்ச்சேரு - சொல்லுகிறேனின்ன மொரு விவரந்தானே, ௪௭

தானென்றசூரணத்துக் கிடைப்பாகங்கேள்-சமரசமாம்வங்காளச் சீனிவிட்டு, பானென்றகியாழமெல்லாம் பாண்டத்திலிட்டுப்-பாலோ டுசீனிரண்டும் பாகுசேரு, மானென்றவிழியணங்கைப் புணருமைந் தா-மாந்தருக்குச்சொல்லாதே மதிமாறாதே, கானென்றசூரணத்தை போட்டுத்தீயில்-கைம்முறையாய்க் கிண்டுவாயடிபற்றாதே ௪௮

பற்றுதேழுந்திரிபே ரீத்தன்பழங்கள்-பக்குவமாய்வகைக்கிரண்டு பலந்தான்போடு, பற்றுதேயாவினெய் படிதான்ரண்டு- பண்பாக வார்த்துதிலேகிண்டுகிண்டு, பற்றுதேமுறியாம லடிபற்றுமல்-பாமகாகூமெழுகுபதம் வருதற்பார்த்து, சுற்றுதேலேகியத்தை யிறக்கிக்கொண்டு-சூடாறிவந்தவுடன் தேனைவாரே, ௪௯

தேனென்னகொம்புத்தேன் படிதான்வாரு-செப்பரியஅப்பிரேகச்செந்தூரங்கேள், வானென்றசெந்தூரம் பலந்தானென்று-வங்கச்செந்தூரமொருபலமேபோடு, கானென்றரசமொ டரிதாரபற்பங்-கணக்கோடுவகைக்கு ஒருபலமேபோடு, சேனென்றபுண்ணியனேயெல்லாம்நன்றாய்ச்-சேர்த்துநீலேகியத்தை நன்றாய்ச்செய்யே. ௫௰

செய்தபின்புசாபவ்கழு வர்த்தியாகச்-சிறப்பானகணபதியும் கந்தன்பூசை, செய்தபின்பு ஆயிபதம் பூசைபண்ணு-தீர்க்கமாய் வியாதிமாரணத்தையோது, செய்தபின்புவயித்தியற்கு மகிழ்ந்துநீதான்-திறமாகநாலிலொருபாகமீயே. ௫௧

ஈய்ந்துமனங்குளிரவெகு மானஞ்செய்து - இதமான அவிழ்தத்தை யுண்டுதேறு' ஆய்ந்தவிழ்தம்நாளொன்றுக் கிருவேளை- காலையந்தி முதல்கொட்டைப் பாக்களவுவீதம், சேர்ந்ததொருலேகியத்துக் கிசசாபத்தியம்- திறமாகமண்டலந்தான் கொண்டுதேறு, ஆய்ந்தவிழ்தமண்டலந்தான் கொள்ளும்போது, ஆச்சரியமாய்த்தேகம் பசும்பொன்னாமே, ௫௨

பசும்பொன்னாந்தீருகிற நோயைக்கேளு-பகாரியமேகவகை யிருபதும்போம், பசும்பொன்னாஞ்சேர்த்துமங்க டொண்ணூற்றாறும்-பறக்குமடாகிரந்தி யரையாப்புசூலை, பசும்பொன்னாமந்தார மீளைகாசம்-பழுதானகாமாலை சோகைபாண்டு, அசங்காதசயங்குன்மம் கிரிச்சினங்களாறுமடாபதினெட்டுக் குட்டமென்னே, ௫௩

குட்டமென்றவாயிரோ யிருபத்றாறுங்-குடிகெடுத்தபித்தம்நாற்பதும்போகும், மட்டமாம்வாதமெண் பதும்போகும்-மஞ்சளூற்றவுதிரவெள்ளை பிரமியம்போம், பட்டமாஞ்கிரங்குசொறி கரப்பான்போகும்-படர்தேமல்தாமரைகள் பதினெண்சூலை, சட்டமாம்லிங்கப்புற்று யோனிப்புற்று * தழுதணையுமேகவகை யூறலென்னே, ()

* தழுதணை-மேகத்தடிப்பு.

என்னவேதொண்டைப்புண் கண்டமாலை-யெழுவாளை விற்புருதிபிளவைபுற்று,மன்னவேகன்னேசிகன்நப்புற்று மகோதரமுழுண்மாந்தை தீராககவுசி, அன்னவேபெருவயிறு காய்ச்சல்கொண்டை-அத்

திசுரமத்திவெட்டையுஷ்ணவாயு, வின்னமொருஅரோசிகங்க ளன்ன- தோஷம்-வெள்ளோக்காளங்களொடு விக்கற்போமே, ௫௫

விக்கல்கைகாலெரிவு தேகக்காந்தல்- மெலிவானபெரும்பாடோ டெலும்புரிக்கி, மெய்க்கவேகுழிவாளை யாருப்புண்கள்- மேலானரத் தவாய்வுடனேமிக்க, செய்க்கவேமூலக்குத்து மார்பிலாணி-திகழ்பெ ரியதொடைவாழை யிந்திரகண்டி, எய்க்கவேநரம்புவாய்ச் சிலந்தி யோடு-இந்தவகைநோய்களெண் பத்துநான்கே. ௫௬

நான்கோடுபௌத்திரமு நேத்திரரோகம்-நந்தாதசிரசுநோய் தொண்ணூற்ருறும், ஊன்பாய்ந்தமூலவகையண்டவாயு- உண்மையற்ற சயரோகம்நாக்குரோகம், கூன்பாய்ந்தவளைவுகுத்துப்பிசமேல்மூச்சு- குடிகெடுக்கும்கிறுகிறுப்பு முதலாமெல்லாம், மீன்போன்றவிழிமாதே தீருந்தீரும்-மிகுசோபநோயெழுந்து வீறுந்தானே, ௫௭

தானென்றஸ்திரீகர்ப்ப நோய்களேழுந் - தணிந்துவிடுமலடியுமே பெறுவாள்பிள்ளை, பானென்றசிலவிஷங்க ளறுபானென்கும்-பறக்கும் வண்டோடெலிக்கடியும் செய்யான்கூட, தானென்றபூரான்றன்கடிக ளெல்லாந்-தனியிடுப்புச்சூலைகழ லண்டவாதம், தேனென்ற மேகரா சாங்கப்பேரும்-செப்பிடுநோயாவுந்தான் தீர்ந்துபோமே; ௫௮

போமென்றகல்லடைப்பு நீரடைப்பு-பொல்லாததுர்மாங்கிஷத் தடைப்புகூட, போமென்றநீர்த்துவார மெடுத்தரோகம்-புகலாதசுல க்கழிச்சல்கடுப்பிரத்தம், வேமென்றசரீரத்தில் வெப்புப்பார்வை-வெ ண்குட்டங்கருங்குட்டம்விஷபாகங்கள், பாமென்றவிவ்வகைநோ யெ ல்லாந்தீயிற்-பட்டிடுபஞ்சதுபோலப் பாரிற்போமே, ௫௯

பாரிலேநோயெல்லாம் பறந்துபோகும்-பசுந்தங்கம் போலாகுந் தேகமப்பா, ஆரியுண்டகற்பங்க ளிருக்கொவ்வாது ஆச்சரியத் * தாதுவெல்லாம் வீறிக்கட்டும், பாரியேநரைதிரைக ளெல்லாமாறும்- ப ளபளப்புவுடம்பெலாம் பரவிநிற்கும், காரியமாந்தேகமது கமழும் வாசம்-கண்களுந்தான்செவ்வலரிப் பூப்போலாமே, ௬௰

* தாதுகட்டும்-திரிநாடிகளு முறுக்கேநிற்கும்,

பூப்போலாந்தேகமது வெந்துமின்னும்-புனிதமிகுந்திரியச் சேது பொங்காநிற்கும், பூப்போலாஞ்சுக்கிலமு மிறுகிக்கட்டும்- பூவையுட ன்சம்போகஞ் செய்யப்போகின், * நாப்பாலாலளவறிந்து சொல்லப் போமோ-நாடோறும்புத்தூடே யிருக்கவேண்டும், தாப்பானசையோ

கத்தாலேகெட்டுத்-தயங்காதேபெண்மாய்கை தள்ளுதள்ளே, ௬௧

* காப்பால்-நாவினால்என்பது பொருள்,

மாய்கையடாபெண்மாய்கை தள்ளவேண்டும் - மங்கினால்தேகசித்தியோகசித்தி, மாய்வதுமெய்மோகவலைக்குள்ளேசிக்கி - மாண்டார்கள்கோடான கோடிபேர்தான் மாய்கைவலைமூடினால் யோகஞ்ஞானம் வாய்க்காதுசித்தியெல்லா மழிந்துபோகும். மாய்கைதள்ளி நாதாக்கள்ரிஷிகள்சித்தர் மாளாமலுகாந்தவரை வாழ்ந்திட்டாரே, ௬௨

வாழ்ந்திட்டவாதிமகன் வைத்தியனென்றால் - மைந்தனேகைம்முறைகளறிந்துசெய்வான், ஆழ்ந்திட்டசுழிமுனைபற்றி நாடிபார்ப்பானந்தந்தவிதமறிந்து அவிழ்தஞ்செய்வான், ஆழ்ந்திட்டதாதுவிட கலக்கம்பார்த்து-ஆள்பலமுநோய்பலமு மாய்ந்தாய்ந்தோர்ந்து, சூழ்ந்திட்டநோய்களெல்லாந் தீரச்செய்வான் தொல்லுலகில் வயித்தியர்கள் செய்யார்பாரே, ௬௩

பாரப்பாமேகவகை யிருபதுந்தான் பறப்பதற்கு அப்பிரேகச்செந்தூரங்கேள், பாரப்பாநாலுவகைச் சாதியுண்டு-பரிவானகிருஷ்ணவப்பிரகமிகவுநன்று, பாரப்பாபத்துபலம் நிறுத்துக்கொண்டு பசுவினிடகோமயத்தில் சாணக்கத்தில், பாரப்பாஅப்பிரேக மதிலேயிட்டுப் பண்பாகஅவித்தெடுத்து இடித்திடாயே, ௬௪

இடித்துமேசுண்ணையுள்ள கருநெல்தன்னை-யிதமாகக்கலந்துநன்றாய்ச் செட்டில்கட்டி, வடித்துபத்துவிசைகாடி தனனிற்றேய்த்து - வலுவாகப்பிசைந்தந்தச் செக்கைதள்ளி, நடித்துமேமூன்றுநாள் சென்றபின்பு கலமாகத்தெளிவிறுத்துக் கொள்ளுமைந்தா, படித்துமேகண புதியைப்பூசைபண்ணு-பரிவாகாவகீதம் பார்த்துவாங்கே, ௬௫

வாங்கியேகல்வத்தி லிட்டுப்பின்னும்-வாகுடனேபழச்சாற்றால் நாலுசாமம், பாங்காகவாட்டியே வில்லைதட்டிப்-பக்குவமா யோட்டினிலிட்டோடுமூடி, ஆங்கியேகுழிவெட்டிக் கெசபுடமேபோடு-ஆறவிட்டேயெடுத்துமுன்போ லரைத்துக்கட்டித்,தியங்காதேயோட்டில்வைத்தோடுமூடிச்-சீலைசெய்துமுன்போல கெசபுடத்தைப்போடே, ()

போட்டுமேயாறவிட்டே யெடுத்துப்பாரு-புகலுமுறைபத்துவிசைதப்பாதேசெய், ஆட்டுமேசல்மிஷங்க ளற்றுநிற்கும்-அதன்பின்புவாலரசுநாவலத்தி, பாட்டியேநாலுவகைப் பட்டைவாங்கிப்- பக்குவமாயிடித்துநன்றாய்க் கியாழஞ்செய்து, நாட்டியேகியாழத்தா லரைத்தரைத்து-நந்தாமல்முன்போலப் புடந்தான்பத்தே, ௬௭

பத்தானகுமரிச்சார் பலந்தான்பத்துப் பகாரியமுருக்கிலைச்சார் புடந்தான்பத்து, அற்றனகொடிவேலிச் சாற்றால்பத்து- ஆரானிசாற்றாலே புடந்தான்பத்து, கத்தானகவிழ்தும்பைச் சாற்றால்பத்து- காந்தைசார்செருப்படிச்சார் வகைதான்பத்து, கத்தானவெருக்கிலையின் பழுப்புச்சாற்றால்-சலியாமல்பத்துவிசை யரைத்துப்போடே. ௬அ

அரைத்துமே குமட்டிமாதளையிற்பற்று-அடைவானபுளிந்தமாதளையிற்பத்து, உரைத்துமேபோகாமல் முறைதப்பாமல்- ஒளியாமல் நாற்றிரண்டுபத்துமப்பா, அரைத்துமேபுடந்தீர்ந்தே யெடுத்துப்பாரு-அம்மம்மா செந்தூர மருணன்போலாம், தரைதனிலேவயித்தியர்களறியவேண்டும்-தானதிலேமாவிடைச்செந் தூரம்போடே, ௬௯

போட்டதின்மேலரிசியிடு வுழுந்துபோடு-புதையாதுசெந்தூரந்தான்மிதக்கும்பாரு, காட்டுமேமிதப்பதற்குச் செந்தூரந்தான்-கசடானதனுக்கற்றுக்கனகமாச்சு, ஊட்டியேயின்னமொரு உபாயங்கேளு-உற்றநெய்பால்சர்க்கரைதே னுடன்பழமும். நாட்டியேபிசைந்துடுப்பிலேற்றிக்காய்ச்சி, நலியாமல்செந்தூரம் மதமாய்வாங்கே. ௭௰

வாங்கியேசர்க்கரைதேன் பழங்கள்நெய்பால்-வகையொன்றிற்குன்றியிடைகொள்ளுகொள்ளு,பாங்கியேமண்டலந்தான் கொள்ளும்போது-பாடியதோர்மேகவகை யிருபதும்போம், நீங்கியேகாசவகை யுஷ்ணரோகம் நிலையாதுஅஸ்திசுர மஸ்திவெட்டை, தாங்கியேசயரோகந்தொண்ணூற்றாறும் சண்டாளக்கிரிச்சினங்களாறும்போச்சே, ()

போச்சப்பாபிரமேகம் வெள்ளைமஞ்சள்- புகழானபிரமியமுமேகவாய்வும், போச்சப்பாகிராணிவகை பொல்லாரோசம்- புகலவொண்ணுச்சன்னிவகை யெல்லாமோடும், காச்சப்பாகாலெரிவு கையெரிவு மேனி - காந்தலுளைப்புடனே யிருமல்போகும், பாச்சப்பாசர்வரோயெல்லாந்தீரும் பளபளக்குந்தேகமெல்லாம் பாலையாமே, ௭௨

பாலையாந்தாதுவெல்லா மிறுகிக்கட்டும்-பங்கயம்போலங்கதிறந் தங்கம்போலாம், காலையாஞ்சந்திரனி லமிர்தமூறும்- கண்கெட்டமனிடரோ வறியப்போறார், ஆலமுண்டகண்டரிட மாகவைத்த- ஆயிடநாதம்டா தெளிந்துபாரு, வேலைக்கும்வாதிக்கு மப்பிரேகந்தான்-மேதினியிலொன்றுமில்லை விபரங்கேளே. ௭௩

* கருவிக்கந்தரசாயனம்.

கேளேநீசர்வரோ யெல்லாந்தீரக்-கிளத்துகிறேன் கருவிக்கந்தத்தின்மார்க்கம், கேளேநீகணபதியைப் போற்றிக்கொள்ளு - குக்கன்பாத

ம்வணர்கிச்சற் குருவைப்போற்றி, கேளேகோண்கோஷ்டம்பலந்தா னுலு - காரகண்டதிப்பிலியும் பலந்தானரண்டு, விளேசுக்கிரண்டு சாதிக்காய்ரண்டு-மேலானகிராம்பு சீரகமுங்கூட்டே, ௭௪

✻ கதலிக்கந்தம்-வாழைப்பூ,

கூட்டியேயிள வறுப்பாய்ச் சூரணித்துக்-குணமாகக்கைகொண்டு கூறக்கேளு,கூட்டியேயிளகருணைச் சங்கம்வேரு-குலவுவகைக்கிரண் டுபல மிடித்துத்தூளாய், கூட்டியேமுன்மருந்தில் சேர்த்துவைத்து க்-கூறுபுளிநாளிசட்டி யொன்றில்விட்டு, காட்டியேகதலிப்பூ நாறு வெட்டிக்-காராவின்பால்கரைத்து வடிதான்கொண்டே, ௭௫

கொண்டேதான்படிரண்டு பாண்டத்தூற்று- கூராவைங்காரச்சிசி பலந்தான்பத்தும், கண்டேதான்கரைத்துநன்று யடுப்பிலேற்றிக்-கா ய்ச்சியேமெழுகுபதமானபின்பு, பண்டேதான்சூரணத்தைத தூவிய ப்பாக்குவமாய்க்கிண்டிவைக்க ரசாயஞ்சொன்னேம், இண்டேதா னிறக்கிகணபதியுங்கந்த-னிதமான✻வடுகனேயும்பூசைபண்ணே, ௭௬

✻ வடுகன்-வைரவன்.

பண்ணியேதேன்படிக்கால் விட்டுக்கிண்டிப் - பரணிதனிலடக்கி நெற்புடத்தில்வைத்து, உண்ணியேநாளொன்றிற் கந்திசந்தி -யுத்தம மேகொட்டைப்பாக்களவுநோம், பெண்ணேகேள்பத்தியமா யுண்டு தேறு-பெரும்பாடுமெறும்புருக்கிப்பிறமேகங்கள், நண்ணேதான்மே கவகைபதினென்குலே-நாடாதுகிரந்திகுட்ட மறையாப்பெண்ணே ()

என்னவேயத்திசுர மத்திவெட்டை-யியல்பான வுட்டணத்தோடெ ரிவுகாந்தல், கன்னவேசிரங்குசொரிகரப்பானூரல்- கனமானகிராணி வகைமூலச்சூடு, நன்னவேவயிளைப்பிருமல்காசக்கூறு-நலங்கெடுக்கு நீ ரிழிவுகிரிச்சினங்கள், என்னவேஸ்திரீகளுக்கு சூசிகாசெர்ப்பம்- ஏழு வகைகரோகங்க டீர்ந்துபோச்சே, ௭௮

போச்சென்றவாக்கியம்வாய்ப் பேச்சோமைந்தா- புகலுகிறேன் ரசப்பற்பம் வங்கபற்பம், காச்சென்றுசேர்த்துநீ கொண்டாயானல்-க னமானரோகமெல்லாங் கடவேபுக்கும், ஆச்சென்றவாதமொடு வயி த்தியமென்ன-ஆராய்ந்துசாத்திரத்தைப் பார்க்கவேண்டும், காச்செ ன்றகுருதுறைகை முறையும்வேண்டுங்- கனமானவாதியும் வயித்திய னுவானே, ௭௯

ஆவதற்குமுப்பூவையறியவேண்டு - மல்லாட்டால்வாதியல்ல நிரு மூடன்றான், ஆவதற்குவழுலேயென்ற கருவறிந்தால்-ஆடலாம்வாதமு

தல் வயித்தியந்தேர்ந்தே, ஆதவற்குழலைவிட்டால் வாதம்போச்சு- அவிழ்தங்கள்செய்தாலுஞ் சித்தியில்லை, ஆவதற்குக்குருதேடி யறிந் தபோது- ஆதியர்முப்பூவை முன்னேசெய்யே. அ௰

இரசபற்பம்

செய்வதற்குரசபற்பஞ் செப்பக்கேளு-திரமானசூதமொருபலந் தான்வாங்கு, பைவதற்குபேனிச்சார் வெற்றிலைச்சார்-பரிவானபழம் ஞ்ச * ளாகாசத்தாள், உய்வதற்குக் 0 கொடுவேலிக் கியாழம்வைத் து-உற்ற + திரிபலைக்கியாழ முவைந்துசெய்து, நைவதற்குவண்டங்கத் திரியின்சாற்றில்-நன்கரைத்தேயடுப்பேற்றித்தகிகரும்பே. அக

* ஆகாசத்தாள்-ஒட்டரை 0 கொடிவேலி-சித்திரமூலம்.

\+ திரிபலை கடுக்காய் தான்றிக்காய்-நெல்லிக்காய்.

கரும்பினிடகறணையினுற்றேய்ததும்த்தி- கமைமானவொரசாமந் தீபம்போலே, விரும்பியேமத்திததுஞடுமூடி-விதமாகவெழுசீலைமண் ணுஞ்செய்து, அரும்பியேகுக்குடமாம் புடத்தைப்போடு - ஆறவிட் டேயெடுத்துமறு படியுமைந்தா, கரும்பிலேகிண்டாம லோடுமூடிக்- கடுகெனவேமுன்போலப் புடத்தைப்போடே. அஉ

போட்டுமேயாறவிட் டெடுத்துப்பாரு-புகழாகநீகரும்பால் மே லூட்டாமல், ஆட்டுமேமுன்போலமூடிசெய்து- அப்பனேகுக்குடத் திற்போட்டெடுத்து, நாட்டியேயிப்படியே திறமாய்ச்செய்து- நாலு பத்துமெருவெடுத்து நன்றாயாய்ந்து, நீட்டியேவேதாந்த வேதாந்தர் நீ-மகிழ்ந்துபுடம்போட்டு நினைவாய்ச்செய்யே. அங

செய்யவேதவளநிறமாகும்பாரு - சிவசிவாவென்னசொல்வேன் சூதபற்பஞ், செய்யவேயனுபான மறிந்துகொண்டால் தீராதநோயே துசெப்பக்கேளு, பையவேபன்னைவெல்லம் நெய்தான்பாலில்-பரிவான லேகியங்கள் கியாழ்பாகம், உய்யவேகொண்டுவரத் தீரும்நோய்கள்- உரைக்கிறேன்கிரந்திகுட்ட மரையாப்பின்னே. அச

* தவளம்-வெள்ளை.

என்னவேகுன்மயெட்டுக் கிராணியாறும்-இணைந்துவருமூலவனை பௌத்திரந்தீரும், கன்னவேகைமுடக்குக் கால்முடக்குக் - கபாலகு ஷ்டம்சீரிழிவு கயரோகங்கள், வின்னமாம்பிளவைபுற்றுக் கண்டமா லை - விற்புருதிகுழிவாளை ஆறாப்புண்கள், அன்னமேமேகப்புண ணமுபுண்சூலை-அரிகரப்பன்சொறிகரப்பா லோத்தும்போமே. அரு

தாம்பிரபற்பம்,

போமேதான்றாம்பிரத்தின் பற்பஞ்சேரு-புகலரியதாம்பிரத்தை தகடாய்த்தட்டி, தாமேதான்சுத்திசெய்து- துலக்கமுடனெடுத்துஓட்டிலிட்டு, நாமேதானடுப்பேற்றி யெரியைமூட்டி-நற்கரும்புதன்னைத்துண்டாய் நறுக்கிக்கொண்டு, வேமேதானறுக்கிய தோர்கரும்பின்மேல்-விதயாகத்தாம்பிரத்திற் றேய்த்திடாயே. ௮௬

தேய்த்திடவேநாற்சாமங் கைம்மாறாமல் தேய்க்கவேதாம்பிரந்தானொருங்கிநிற்கும், வாய்த்திடவேகல்வத்திலிட்டுநன்றாய். மைந்தனே நெல்லுமியுங்கூடவிட்டு, ஆய்த்துபேயரைத்திடவே நொருங்குந்தானாய்-அதையெடுத்தோட்டினிலிட்டோடுமூடி, வாய்த்துபேசீலைசெய்துகெசபுடத்தில்-மாபுடமாய்ப் போட்டிடச்செந்தூரமாமே, ௮௭

ஆமடாபற்பத்திலசடிருந்தா-லரையாமற்பின் னுமொரு ஓட்டிலிட்டு, நாமடாசீலைசெய்துபுடத்திற்போடு-நல்லருணன்போலச்செந்தூரமாகும், பாமடாசெந்தூரப் பற்பந்தன்னைப் - பணவெடையாயெடுத்துநெய்பால் தேனிற்கொள்ள, போமடாகுன்மபெட்டுஞ் சூலையாறும் பொல்லாதவாய்வுசென்றதெல்லாம்போச்சே. ௮௮

போச்சென்றமேகவகை யிருபத்தொன்றும்- போசாதகயரோகஞ் சயரோகங்கள், ஆச்சென்றவாதமொடு வாயுசூலை - அஸ்திவெட்டை அஸ்திசுரமுஷ்ணவாயு, காச்சென்றபௌத்திரநோய் சனையடைப்புக்-கடுகடுத்தநீரிழிவு பிரமேகங்கள், தீச்சுட்டகருங்கற்போல் வெடிசூலைப்புண்-திருமின்னம்பலவகைநோய் திறமாய்க்காணே, ()

காணப்பாபற்பங்கள் செந்தூரங்கள்- கருதியேகொள்ளுதற்குக் கருத்தாய்க்கேளு, பூணப்பாஆவின்பால் நெய்யிற்கொள்ளப்-பாதரவாய்க்கொண்டவற்கு புவியின்மீது, ஆணவங்கள் மெத்தவுண்டாம் நாதங்கட்டும்-ஆகாதநோயெல்லா மகன்றுபோகும் கோணமுறுப்பத்தியமோ விச்சாபத்தியம் - கொண்டுவாபெண்மாய்கை தள்ளிநல்லே. ௯௰

நில்லென்றுசொன்னாலும் நிற்கப்போமோ- நீதியுள்ளரதிரோகம் செய்யார்செய்யார், வெல்லுவதார் விந்துவைத்தான மேலோரில்லை-விருதுபெற்றமௌனியல்லோ ஞானயோகி, அல்லவென்றயானியுள்ளோர் நாதத்தைத்தா- னடக்கவறியபமானந்து செத்தார்கோடி, வல்லவனேயானுக்கா லனுபோகஞ்செய்யமாதத்துக் கொருமுறையாய்மதித்துச்செய்யே, ௯௧

வாதத்துக் கெட்டிவினைத் தயிலம்,

செய்யவேவாதமொடுவாயுசூலை - தீரவேயெட்டியிடதயிலங்கேளு, பையவேசொல்லுகிறனெட்டிக்கொட்டை - படிரண்டுதுளந்து மேபூரப்போடு, ஐயவேகல்லூரலி லிடித்துக்கம்போல் - அவ்வெடைக்கு * வெள்ளுள்ளிசேர்த்திடித்து, உய்யவேயிருகுகள்ளிச் சாற்றூவாட்டியுத்தமனேவில்லைதட்டி நிழலுலர்த்தே, ௬௨

* வெள்ளுள்ளி-வெள்ளைப்பூண்டு.

உலர்த்தியேபூப்படத்தில தயிலம்வாங்கு உற்றரசகற்பூரம் பலமோகால்தான், அலர்த்தியேசூடிலொருகாசுபோடு - அப்பனேபரணிதனிலடைததுமூடு, வலுந்துமேகாசெடைதான் தயிலங்கொண்டு-வாகனலேகியங்கள் சூரணங்கள், பலக்கவேசேர்த்துநீ கொள்ளும்போது-பயன்வருங்காண்பலநோயு மொருங்கேபோச்சே. ௬௩

போச்சென்றவனுபான மறிந்துகொண்டால்-பொல்லாதசூலையதி னெட்டும்போகும், ஓச்சென்றவாதமெண் பதுவும்போகும் வாகானகிரந்திபதினெட்டுந்சாகும், காச்சென்றவலியைந்துங் குன்மமெட்டுங் கரையடங்காவாய்வென்ற இருபத்தாறும் - கூச்சென்றமெய்க் கடுப்போடுளைவுகுத்து சூலைமுட்டுஉருத்திரனுங் கிலுவாய்வே, ௬௪

* சிவன்வேம்புத் தயிலம்,

வாயுவொடுசேருவநோயெல்லாந்தீர - மைந்தனேசிவன்வேம்புத் தயிலங்கேளு, வாயுவொடுசிவன்வேம்பு சமூலங்கொண்டு- வளமாகநிழலுலர்த்திச்சூரணித்து, வாயுவென்றசூரணத்தோ டின்னமொன்று வாலுழுவையரிசிசமன் கொண்டேநீதான், வாயுவென்றகருடனிட் கிழங்குச்சாற்றால்-வளமாகவாட்டிமிக வில்லைதட்டே ௬௫

* சிவன்வேம்பு-சிவனார்வேம்பு.

கட்டியேபூப்புடத்திற் றைலம்வாங்கு-கருப்பூரம்காற்பலந்தான் பொடித்துப்போட்டு, கெட்டியாய்காசெடைதான் மண்டலங்கொள்- கெணிதமுடன்மேற்பூசத் தீரும்நோய்கள், குட்டமொடு குறைநோயும்பெருவியாதி-கோளரியமேகவடிசூலைப்புண்கள், கட்டியுடன்வண்டுகடி யுளைச்சல்குத்து-கரப்பனொடுசில்விஷங்கள் காணுதென்னே. ()

சிவன்வேம்புச்சூறணம்,

காணுதசிவன்வேம்புச் சூரணங்கேள்- கருதியேசிவன்வேம்பு சமூலங்கொண்டு,கோணுதநிழலுலர்த்திப் பலந்தான்பத்துக்-குறிப்பா

கச்சங்கம்வேர் பலந்தான்ரண்டு, கோணுதவெள்ளைச்சாரணையின்வே ரும் தூதுவளைமிளகுருணை யமுக்கருவேர், கோணுதுவகைகவகைக்கு ப்பலந்தான்ரண்டு-கொடிவேலிகொச்சிகருஞ் சூரைவேம்பே. கூஎ

வேம்புடனேதிரிகடுகுதிரிபலாதி-விதமானகார்போகி கரியசீரக ம்,சோம்பானகடனுனையும் வசம்பிந்துப்பு செப்பரியகருங்காலிப்பட் டையோடு,கோம்பானமூலமோடு பரங்கிப்பட்டை-கோப்பிரண்டை கருவாகை * யூறற்பட்டை, சோம்பாகவகைக்கிரண்டு பலமாய்ச்சொ ன்னேம்-சொற்பெரியசிவனர்தன்வேம்புகேளே, கூஅ

* ஊறற்பட்டை-கிளியூறற்பட்டை.

கேளேநீயிவையெல்லா மொன்றாய்ச்சேர்த்துக்-கிரமமுடனிழலு லர்த்திச்சூரணித்து, தேளேநற்பாண்டத்தி லிட்டுமைந்தா - திருகுக ள்ளிச்சாறும்வெள் ளாட்டுநீரும், வேளேநீபேய்க்குமட்டிச் சாற்றி ைேடும்-விதமான * தேகிச்சார்வகைகவகைக்கு, கேளேசான்வகைக் குஒருபடிதான்வார்த்து-குமுறவேவிரவின்றாய் மூடிப்போடே ()

* தேகிச்சாறு-எலுமிச்சம்பழச்சாறு,

மூடியேநாள்மூன்று புதைத்துவைத்து- மூசியாமலெடுத்துரவி யுலர்த்திநன்றாய், நாடியேசட்டிதனிலிட்டுமூடி- நணுகியந்திசந்திவெ ருகடிதாளப்பா, மூடியேதூளதனையெடுத்துநீயும்- முன்சொன்னசிவ ன்வேம்புத்தயிலந்தன்னே, பாடியேகாசெடைதான் சேர்த்துக்கொள் ளப்-பதினெட்டுச்சூலேகுட்டங் குறைநோய்போமே. ௱

குறைநோயுமரையாப்பு மட்டகுன்மம் - குன்றுதவெமச்சூலேசொ றிசிரங்கு, கரையாதவாயுஞ்சந் திடுப்புச்சூலே-கைம்முடக்குக் கால்மு டக்குக்கீலுச்சூலே, துறையானகிரந்திகுட்டம் சூழ்கரப்பான் தொட வாளைவிற்புருதி கண்டமாலே, பறையாதலிங்கபுற்று யோனிப்புற்று- பமுவாளையெழுவாளை கன்னப்புற்றே, ௱க

புற்றானசிலந்திவகை காத்தவாயன்-புரையானகுழிவாளை யாறுப்பு ண்கள், ஏத்தானவண்டுகடி புடையன்பூரான் எலிகடியும் பலபலவா ன்சில்விஷங்கள், நத்தானகன்றேசிபக்கப்புற்று-நாவரட்சிபலபுற்றுப் பல்லரணைதானும், மித்தானவாய்வென்ற விருபத்தாறும்-மேகவகை யிரண்டுபத்தும் விழலாய்ப்போமே. ௱உ

போமென்றவிந்தவகை நோய்கள்யாவும் - பொடியாகுங்காயசித்தி மேவுமபாரு, வேமென்றஉலகத்தோர் பிழைக்கவேண்டி- வெளியாக ச்சாத்திரத்தை விரித்துவிட்டேன், காமென்றவைத்தியரோநூலேப்பா ர்த்துக்-கைம்முறையுஞ்செய்முறையுங் கணக்கோடாய்ந்து, நாமெ

ன்ற அகச்செருக்கை விரும்பிடாதே-நலிந்தோர்க்குமருந்தீய்ந்து நிடீ
யைப்பற்றே. ௱லே

கிராணிவகையாறுக்கும் வச்சிராதிகபாடம்.

பற்றவேகிராணிவகையாறுந்தீரப் பாடுகிறேன்வச்சிராதி கபாடங்
கேளு, முற்றுனசாதிக்காய் கிராம்புபத்திரி-முனேயானதிரிகடுகு திரி
பலாதி, கொற்றமுள்ளமாபனேயு மதுரமின்னைங்-குரோசானி வால்மி
ளகுந் * திப்பிலியத்தி, குற்றமிலாக்கோஷ்டமொடு நாகப்பூவுங்-கூற
வொண்ணுப் புகழ் o விடைய + மாஞ்சில்வித்தே. ௱ச

* திப்பிலியத்தி-யானைத்திப்பிலி o விடையம்-அதிவிடையம்

+ மாஞ்சில்-சடாமாஞ்சில்,

வித்தானவோமமிரு சீரகமுமல்லி-விதமானதாளிசமு * முத்தக்காசு
ம், சத்தானமிடிலவங்கமோடுகூட- சார்வானகாட்டாத்திப் பூவோடி
ன்னும், அத்தானகசகசா o கர்க்கடகசிங்கி-அனல்படமேற்றீர்ந்த+ச
டைவன்னிக்கற்பம், கொத்தானமருந்தினுட பட்டையோடும ()கூவி
ளத்தின் பழத்தோடும் விளாவுங்கூட்டே. ௱ரு

* முத்தக்காசு-கோரைக்கிழங்கு o கர்க்கடகசிங்கி- கடுக்காய்ப்பிஞ்சு.

* சடைவள்ளிக்கர்ப்பம்-சடைக்கஞ்சா,

() கூவிளத்தின்பழம்-வில்வப்பழம்.

கூட்டியேயபினேடுபுளியினேடுங்-குணமானமாங்கொட்டை ப
ருப்புமைந்தா, நாட்டியேவகைவகைக்குப் பலமேகால்தான்-நந்தாமற்
சொன்னேங்காண் பிந்தாதேநீ, நீட்டியேயெல்லாமோர்கல்வத்திட்டு
நேர்ப்பானஆலரசுநாவலத்தி, வாட்டியேநீர்ப்பூலா வேருங்கொள்ளு-
வளமான வொதியம்பட்டையுமாமன்றே. ௱சு

பட்டையாவாரைவேர் விடத்தோல்நெல்லி-பாங்கானவிலந்தை
வேர் பலவுங்கொண்டு, இட்டமுடன்வகைக்கிரண்டு பலந்தான்சொ
ன்னே-மிடித்துமேயெட்டொன்றாய்க் கியாழஞ்செய்து, எட்டாதமு
ன்சொன்ன மருந்தையெல்லாம்-இளவறுப்பாய்ச்செய்துமுன்னே கி
யாழமூட்டு, மூட்டியேபெருங்காயங் கழஞ்சொன்றிற்கு- மூதண்டக
ல்வத்திலாட்டுவாயே. ௱எ

ஆட்டியொன்றாய்க்காயவைத் தடைவாய்மைந்தா - அன்புடனே
தொன்னேதனி லதனையூற்றித்,தோட்டியேகாய்கின்ற சட்டிக்குள்ளே
தொன்னேயுடன்மருந்தைநடு வைத்துமூடி,மூட்டியேதீயதனை மெது
வாய்வேக-முடிமன்னுநீசெய்து முடிந்தபின்பு மாட்டியேபுரட்டிநன்
றாய்வேகவைத்து-மருப்புடமெடுத்ததனைக் கல்வத்தாட்டே. ௱அ

கல்வத்திலிட்டிமுன் கரையத்தூட்டி களரவேயாட்டிமுன் தொன்னைக்குள்ளே, கல்வத்தில்முன்போலே மருந்தையிட்டுக்-காய்கின்ற சட்டிச்சூள்வைத்துமூடு, நல்லைவத்துமுன்போலே வேகவைத்து-நலமாகவெடுத்ததனைக் கல்வத்திட்டு, எல்லைத்துயிப்படியே யரைத்தரைத்து-ஏழுதரம்பாவனையாய்ச் செய்திடாயே. ௱௯

செய்திடவேசுண்ணடக்காய்ப் பிரமாணந்தான்-திரட்டியேகுளிகைதன்னை நிழலுலர்த்தி, பைதுமேயனுபான மறிந்துகொணடாற்-பறக்குமேமூறுவித கிராணியெல்லாம், பொய்துமே நற்பொன்னாங் காணிச்சாறும் - புகழாவாரைவேலின் பட்டைச்சாறும், எய்துமே கோரையிட கிழங்கின்சாறு ‡ இதமேதியிர்மோருந் தேனுமாமே.(

‡ மேதி-எருமை,

தேனோடுபச்சரிசி கழுநீர்சேர்த்துச்-செப்பியதோரிவ்வகையாமனுபானத்தில், ஆனென்றகிராணிவகை யினப்பிரிந்து - அந்தந்தநோயினனுபானங்கண்டு, கானென்றவொருவுண்டைபோட்டுமைந்தா- கைகண்டுபிடித்தாற்போற் கிராணியாகும், தேனென்ற வயிற்றுளேச்சற்சீழ்ரத்தந்-தியங்கியேயபானத்திற் கடுப்புமபோமே. ககக

கபாடலேகியம்

போமென்றகிராணிக்கு வச்சிரக்குளிகை புகழ்ந்திட்டே நின்னமொருலேகியங்கள், ஆமென்றசாதிக்காய் கிராம்புபத்திரி- ஆனைத்திப்பிலியோமம் * விடையங்கோஷ்டம், வாமென்றகசகசா சீரகந்தான் வால்மிளகுதாளிசமுங் குராசானிமற்றும், வாமென்றதிரிகடுகு திரிபலாதி + மதுரமொடுவெந்தியமுஞ் சிக்கியாமே. ககஉ

* விடையம்-அதிவிடையம் + மதூரம்-அதிமதுரம்

சிங்கியொடுமெல்லியுந்தான் லவங்கமபினி - திறமானகஞ்சாவுமாஞ்சிவேரும், சங்கியதோரகிலோடு காட்டாத்திப்பூ-தடவானதாமரையின் கிழங்கினோடு, இங்கிதமாம்விழலரிசி யிவற்றோடின்னும் - இதமானநீர்முள்ளிவித்துகூட, மங்கியதோர்கார்கோளி முத்தக்காசு - வழூத்தவொண்ணுத் தென்னைமரப்பாளைப்பூவே. ககங

பூவானமாதளையின் வித்துங்கூடப்-பூலாவேர்க்கருவேலம் வித்தும்மைந்தா, காவானபெருமரத்தின் வேருஞ்செய்ய-கதியானபுளியின்விரைத் தோலுமாகும், பாவானமாங்கொட்டைப் பருப்புமாகும்-பகரரியகாட்டுக்குள் கருணைவேரும், மாலாவகைக்கிரண்டு பலமே சொன்னோம்-வளர்நிழலிலுலர்த்திச் சூரணந்தான்செய்யே, ககச

செய்திடவேயின்னமொருசெய்திகேளு தீக்குமுடலைவாசுகாவலத்தி, ஐதிடவேமுள்ளிலவோடொதியம்பட்டை-பப்பளைமுடக்கற்றான் வெள்ளைப்பூலா, எய்திடவேயிவைசமனா யிடித்துநன்று- யெட்டொன்றாய்க்கியாழும்வைத் திடித்துக்கொண்டு, பெய்திடவே யாவின்பால்படிதானரண்டு- பெட்புடனேபனைவெல்லம் பலந்தான்பத்தே. ௧௧௫

பத்தானபாலோடுகியாழுமரண்டு-பக்குவமாய்டுப்பேற்றிப்பாகுசேரில், அத்தானசூரணத்தைக் கொட்டிக்கொண்டு- ஆவினெய்படிதானொன் றகிலேவாரு, முத்தாகக்கிண்டியதை மெழுகுபோலே- முதிராமலிறக்கிவைத்துத் தேனைவாரு, பற்றாமற்பார்த்துமே யிம்முமபோது-பக்குவமாய்க்கெந்தக செந்தூரப்போடே. ௧௧௬

போடவேலோகசெந்தூரப்போடு-புகழாகவகைவகைக்கோர் பலமேபோடு, ஆடவேயிப்படி லேகியந்தானப்பா- அன்பாகநாளொன்றுக்கந்திசந்தி, வாடவேவேண்டாமன்னடமெய்கொள்ளு- மகத்தான கிராணிவகையாறும்போகும், சாடிவருஞ்சீழ்க்கிராணி சலக்கிராணி சந்திரன்றன்கிராணியொடு மூலவாய்வே. ௧௧௭

மூலமாம்வாயுவென்ற கிராணியோடும்- முனையானகுசிகா கிராணியோடும், ஆலமாம்பாண்டுவகை கிராணியோடும்- அசங்காதகிராணிகுன்மம் பிததமேகம், சீலமாய்வாதபித்தம் வாயுநீங்கும் - தடுத்துவந்தசன்னடைமேகபெருங்கும், சிலையாமலையிற்கடுப்பு மூலகிராணி- தீங்கானநோயெல்லாந் தேங்குப்போமே. ௧௧௮

சயகாசத்துக்கு தூதுவளை சற்பம்.

பாரப்பாசயகாசமெல்லாந்தீர - பாடுகிறேன் தூதுவளைக்கிருதந்தன்னை, நேரப்பா தூதுவளைச் சமூலஞ்சொன்னோம் -நிழலிலேயுலர்த்தித்தூள்பலந்தானாலு, சேரப்பாவழுதலையுங் கண்டங்காலி-சிறுதேக்குஞ்சேரியுடனாடதோடை, ஓரப்பாவகைபலந்தா னொன்றுசொன்னோம்-உலர்த்தித்தூள்முன்பருந்தோ டொக்கச்சேரே, ௧௧௯

சேர்ந்துமேதிரிகடுகுதிரிபலாதி-சிற்றரத்தைபேரரத்தை சிங்கிகோஷ்டம், கார்த்துமேசீரகமும் கொத்தமல்லி-கசகசாசாதிக்காய் பத்திரிகிராம்பு,சார்த்துமேகூகைநீர்க்கிராகாமய-சண்பகப்பூவசம்பு மீறுசீரகமுமதுரம், கோர்த்துமேநெற்பொரியும பருத்திவித்தும்- கெடிதானநெல்லிமுத்தம் விளாவிஞ்சோடே. ௧௨0

விளாவேலோடுநிலப்பனைவேர் முக்காவேளை-மேலான சைசுவைகெந்திவேர்த்தோலுந்தான்; அளவானசிறுதேக்குசெவியமாஞ்சில- அழகா

ணதாளிசப்புத்திரியுங்கூட்டு, மிளகோமூலமொடுதேவதார- வீலகி லுமிலவங்கப்பட்டையோடேலம், விளவாமைழுக்குரட்டை கீழ்க்கால் நெல்லி-மேனிகரிசாலையுடன்பிராய் முட்டியிந்தே. கஉக

* அசுவகெந்தி-அமுக்குரா,

இந்தோடுகருங்காலி யிழந்துகொற்றை - யிருவேலிதேள்கொடுக்கி மிருதணமுஞ்சங்கு, இந்தோடுபொடுதலையும் * குல்லிவேரும்- இதின் சார்வெட்பாலையும்வேலிப்பருத்தி, இத்தோடு o சதாவேரிமணத்தக் காளி- யிவையெல்லாம்வஸ்திரகாய மதாய்ச்செய்து, இதந்தோடுமுன் சொன்னசூரணத்தில் இதமாகபணமகிழ்வுற்றெருக்கச்சேரே. கஉஉ

* குல்லை-துளசி o சதாவேரி-தண்ணீர்மீட்டான்.

சேர்த்துமேயின்னமொரு செய்திகேளு-செப்பரிய வாவின்பால வெள்ளாட்டின்பால், சேர்த்துமேகுமட்டிமா தளேயின்சாறுந்- தேசி யென்றபழச்சார்நெல்லிக்காய்சாறும், சேர்த்துமே * கூழ்ப்பாண்டங் o குமரிச்சாறுந்-திகழரிய ‡ ஆம்பற்சா +ருள்ளிச்சாறும்,பார்த்துமே வகைக்குப்படி யளாதான்சொன்னேம்-பாலானவகைவகைக்குப் படி தான்ரண்டே. கஉங

* கூழ்ப்பாண்டம்-சாம்பற்பூசணி அதேகலியாணபூசணி,
o குமரி-கற்றாழை; ‡ ஆம்பல்-அல்லி, + உள்ளி-வெண்காயம்.

ரண்டானவிவையெல்லாந் தாளிசேரு-ஈயமானபன்னவெல்லம் ப லந்தான்பத்து, கண்டானவங்காளச் சீனிபலம் பத்து-கருவானபனழ வெல்லம் பலந்தானைந்து,அண்டாதேகனைத்தொன்றாய்த் தாளிசேர் த்து-அடுப்பேற்றியோர்விறகா லெரியவூட்டு, பண்டாதே சாமொல் லாம் வற்றக்காய்ச்சிப் - பதங்குழம்பாய்வருமளவிற் பிறண்டங்கொ ட்டே. கஉச

கொட்டியேயடுப்பேற்றிக் கிண்டுவாய்கீ-குறுக்கியே மெழுகுப தந்தியாமறப்பார், அட்டியேபதமான ஆவிநெய்யில்-அன்பாகவொருப டிதான்வார்த்துக்கிண்டு- திட்டமாய்மெழுகுபதம் வருதல்கண்டு-திற மானகொம்புத்தேன் றெளிவாகத்தான், ஒட்டியேநீபகிழ்ந்து உறுதி யாக உதவுமறைபடிவாங்கி யோமகிவாறே. கஉரு

வார்த்திடவேயின்னமொரு வரிசைகேளு - வயித்தியரோயிம்மு றைக்கஷியார்காணூர், ஆர்த்திடவேநாகபற்பம் வங்கபற்பம் அரிதார பற்பமொடுபவளபற்பம், வார்த்திட வேஙைசக்குக்காற் பலமேபோடு

* வழலையென்றகுருவிலொரு காசுபோடு, ஆர்த்திடவே யப்பிரேகச் செந்தூரந்தா னதட்டியேயொருபலந்தான் கூட்டப்போடே. கஉசு

* வழலை-முப்பூ.

கூட்டவேபோட்டுநீ கணேசன்கந்தன்-குலவிநெல்வடுகனையும் பூசைபண்ணு, வாடவேவேண்டாங்காண் தேவிபூசை- வளமாகச்செய்துநீசாபந்தீர்த்து, சாடவேசட்டியிலே பதனம்பண்ணு- சரியாகநெற்புடத்தி விட்டுவாங்கு, பாடினேன்கொட்டைப்பாக்களவுநேரம்- பத்தியமாய்மண்டலந்தா னுண்டுதேறே. கஉஎ

உண்டிட்டவேவியாதிமா ரணத்தையோத-வோயாதுநோயாளிகளுமந்தீரும், கொண்டிடவேசயகாசந் தொண்ணூற்றாறுங் - குத்திருமல்நெட்டிருமல்குருகுருப்புச், சண்டியாமிளைப்பிருமலீளைகாசந்- தனிப்பித்தமந்தாரகாசம் * கோஷம், தொண்டையிலேகுவளைக்கட்டு சிலேஷ்மகாசந்-தொலையாதவாதசயம் விழலாய்ப்போமே. கஉஅ

* கோஷம்- இரைச்சல்.

விழலாகுமஸ்திசுர மஸ்திவெட்டை-வெண்மஞ்சட்காமாலைசோகைபாண்டு, விழலாகும்வாய்வுடனேசூலைகுன்மம்-மேகவகை கிரந்தியரையாபபுச்சூலை, விழலாகுமெய்க்குடைச்சல் கைக்குடைச்சல்-மேலெரிவுகாந்தலுளைப் பிடிப்புச்சூலை, விழலாகும்கீர்சூலை யண்டவாதம்-வீறானநோய்களெல்லாம் நீறாய்ப்போமே. கஉகூ

பேர்மென்றபாண்டுகாமாலைசோகை-போகவேகரிசாலைமேன்கியுங்கேள், தேமென்றகரிசாலைசமூலங்கொண்டு-திறமாகநிழலுலர்த்திச்சூரணித்து, நாமென்றபலம்பத்து நிறுத்துவைத்து- நல்மானகடுக்காயும்நெல்லிதான்றி, வேமென்றதிரிகடுகுமிரண்டுசேரம் - விதமானதாளிசையுமோமமாமே. கஙo

ஓமமோடதிமதுரங் கொத்துமல்லி-யுற்றதொருஏலமொடுலவங்கப்பட்டை, ஓமமொடுசடாமாஞ்சி சிங்கிகோஷ்டம் - ஒளிவானநாகப்பூவகிலுங்கூட, ஓமமொடுமரமஞ்சள் முட்காவேளை-உண்மைபெற்றசாதிக்காப்பத்திரிகிராம்பு, ஓமம்வாய்விளங்கமொடுதகரவித்து-உரையானவெட்பாலை * சிறுவிளாவேரே. கஙக

* சிறுவிளா-குட்டிவிளா.

வேரானவெட்டிவிலா மிச்சமுன்னை-வில்வவேர் விளாம்பழத்தினோடுங்கூட, பேரானதழுதாழை பொன்னாங்கண்ணி-பெரியவொரு

நாய்வேளைகீழ்க்காய்நெல்லி, வீறானசிற்றாமுட்டி பேராமுட்டி*வீழி சங்குமுசுமுசுக்கை யமுக்கராநொச்சி; பாரானநெருஞ்சிசெருப்படை யின்வேரும்-பலமானகாட்டளிலைக் குறிஞ்சிவேரம. ௧௩௨

* வீழி-விழுதி.

வாமென்றநிலவாகை விஷ்ணுகாந்தி-வன்முருங்கை பெருமருந் துங்காட்டுமல்லி, வேமென்றசிறியவா லுழுவையோடு -வெட்பாலைய ரிசிமுத்தம்பேரீத்தோடு, தாமென்றமுந்திரிவேர் சித்திரமூலஞ்-சாற் றுசிறுதேக்குமோட் டரும்பாவாரை, தோமென்றஆல்விழுது தென் னம்பாளை-துணையானசெங்கழுநீர் மூலந்தானே. ௧௩௩

தாஞனநெய்தலொடு மூலவேருந் தனிவெட்டிவேருந்தா மரை யின்வேரும், கானதும்பிமாம் பழந்திரோடு * கங்கைமீட்டான்பே ய்ப்புடலும் பூமிச்சருக்கரை, கோனைவெள்ளருகு காட்டாளிக்கிழங் கு-கூர்முருங்கைப்பூவுமா தளையின்பழமும், தேனைசிறுபசளைப் ப யறிலுப்பை-திகழும்பூதாமரையின் கிழங்காமென்னே. ௧௩௪

* கங்கைமீட்டான்-தண்ணீர்மீட்டான்.

என்னவேவகைக்குவகைப் பலந்தானொன்று- ஏளவறுப்பாய்ச் சரக்கையெல்லாஞ் சூரணித்து,கன்னவேரைவியுலர்த்தி மருந்தோடொ க்க-கலந்துவைத்தே யின்னம்வகை கருதிக்கேளு, பன்னவே நீர்முள் ளி கரிசாலையின்னம்-பருவேப்பம்பட்டையொடு நெல்லிப்பட்டை, வ ன்னமொருநாவலந்தி யொதியம்பட்டை- வாகானஆல்விழுது கூடக் கூட்டே. ௧௩௫

கூட்டேநீகிளியூறற் பட்டைமைந்தா-குல்லையொடுகீழ்க்காயின்நெ ல்லிப்பட்டை; நாட்டேநீகார்கூந்தற் பட்டையோடு-நன்னாரிதன்னுட னேயாடாதோடை, காட்டேநீசேந்திலொடு பேய்ப்பிரப்பன்-கனமான கூழ்ப்பாண்டம் வெள்ளரியின்வித்தும், மாட்டேவாழைப்பூவும் சிறு கீரைதானும்-மாவரசும்நாணலொடு * கையானுமே. ௧௩௬

* கையான்-கரிசலாங்கண்ணி.

ஆமேதான் * கருப்பம்வே ராவின்வேரு-மடைவானநெல்லிவே ர்குமரிவேரும், தாமேதான்தொரட்டிவேர் o காக்கைவேரும்- தனியா னமுடக்கற்றான் வேருந்தானும், போமேதானுழலாத்திகோரைதத்த ண்டும்-பிரமியொடுதழுதாழை ‡ வெள்ளீண்டாகும், நாமேதான்பே ய்க்குமட்டிசூரிகெந்தம்-நலமானவகையொன்றிம் பலந்தானந்தே. ()

* கருப்பம்வேர்-கரும்பின்வேர் o காக்கைவேர்-காக்கணான்வேர்

‡ வெள்ளீண்டு-வெள்ளையீயச்செடி.



ஐந்தாகச்சரக்குவகை யெல்லாம்வாங்கி-யருங்கல்வத்திடித்து ஒருபாண்டத்திட்டு, சிந்தாதேயிருதூணி நீரும்விட்டுத்-திறமாகவெட்டினிலொன் றாக்கிக்கொண்டு, குன்றாதேகியாழத்தை வடித்துவாங்கிக்-குமட்டிமாதளையின்பழச் சாறேநாழி, நன்றான *ரிம்பச்சார்படிதானென்று-நல்லாவின்வெள்ளாட்டுப் பாலுங்கேளே. கங௲

* ரிம்பச்சார்-எலுமிச்சம்பழச்சாறு.

கேளேநீவல்லாரை பளியரைச்சார்-கிரமமுடன் வகையொன்றிற்படிதானென்று, பாளேநீயளந்துமுன் கியாழத்தூட்டிப்- பரிந்தடுப்பிலேற்றிச் சர்க்கரைபலந்தான், நாளேநீயைந்தாகப் போட்டிஞ்சிச்சார்-நாழிவிட்டு அகப்பையினாற் கிண்டக்காய்ச்சு, சூளேநீகுழம்பானார் சூரணத்தைத்-தூவிக்கிண்டாவிநெய் படிதான்வாரே. கஙசூ

வாரேநீயனம்போற் கிண்டிவாங்கு-வளமாகமெழுகுபதம்வருதற்பார்த்து, காரேநீகருகாம லிறக்கிவைத்துக் - கலங்காமலொருபடி கொம்புத்தேன்வாரு, பாரேநீயத்தனையும் போதாவிட்டால்- பக்குவமாயாவினெய்யின் னும்வாரு, சேரேநீநெய்வார்த்துக்கிண்டும்போது-திரிலோகசெந்தூரம் பலந்தானரண்டே. கச0

ரண்டோடுகாந்தச்செந் தூரம்போடு-நல்லகர்ப்பூர சிலாசத்துப்பற்பம், மூண்டாதேயொருபலந்தான் போடுமுன்னே- மொழிந்தமுட்பூக்குருவிலொரு கழஞ்சுபோடு, தண்டாதேயிவையெல்லாம் போட்டுக்கிண்டிச்-சாடிதனிலிட்டுநெக் புடந்தான்வைத்து, கொண்டிடவே நாளொன்றுக்கந்திசந்தி - கொட்டைப்பாக்களவாகக் கொள்ளுகொள்ளே. கசக

கொள்ளேநீநாடோறுந் தப்பாமற்றான்-கூறுகின்ற பத்தியமோஇச்சாபத்தியம், நள்ளேதான்புளிபுகையும் பெண்ணுமாகா-நன்மீனும்பச்சைமாங் கிஷமுமாகா, உள்ளேதானெவ்வொன்று மாகாதப்பா-உத்தமனேபத்தியமாய்க் காக்கச்சொல்லு, விள்ளேதானுகாத நோயநீந்து-வீறுகமருந்தீந்து வயித்தியம்செய்யே. கசஉ

செய்யேதான்பொல்லாத நோய்களெல்லாந்-திறமாக மண்டலந்தான்கொண்டாயானால், நையாதகாமாலை சோகைபாண்டு- நந்தாதசயரோகம்போகும்போகும், மையாதநெண்பாண்ட மாறிப்போகும்-வளமானகவசியுமுள் மாந்தைபோகும், பொய்யாதபீலிபெரு வயிறும்போகும்-பொருமகோதர * மாம்பற்கௌசிபோமே. கசஙு

* ஆம்பல்-நீராம்பல்.

கௌசிபோம்பாண்டுவகைக் கிராணிதீரும்-கனமானஉப்பிசமக் கினியாமாந்தம், கௌசிபோம்பித்தரோகங்காமாலை-கனவெட்டைகா லெரிவுகையெரிவும், கௌசிபோமஸ்திசுரமஸ்திவெட்டை-கதிகெடுத் தவரோசிங்க ளன்னதோஷம், கௌசிபோம்நீரிழிவு மீளபோகுங்- காணுதவாதமெல்லாங் கலங்கிப்போச்சே. கசச

* வெட்டை-பித்தவெட்டை.

o வாயிலப்பு-வாயூறல், மகோதரம்-நீர்க்கோவை.

கொண்டைச் சலக்கோவை யிவைகளுக்கு மருந்து.

போச்சென்றவாயூறல் வாயிலப்பு-போகவேயின்னமொரு சூட்சங் கேளு, காச்சென்றவல்லாரை யொருதலைவெள்ளுள்ளி- கசக்கியேவா யிலிட்டுமெல்லத்தீரும், வேச்சென்றவிம்முறைதா னுருஞ்சொல்லார் வெசுறுக்காய்நெய்யாகும் விரும்பிப்பாரு, காச்சென்றமகோதரம் நீர் க்கோவைபோகக்-காட்டுகிறேனுட்டுக்குள் பாட்டுங்காணே. கசரு

காணவேரும்மட்டிக் காயைவாங்கிக்-கத்திகொண்டுபதினறு கீ ற்றாய்க்கீறி, காண வையைந்துவகை லவணமூட்டிக் - கலசத்திலிட்ட டைத்துஆவிகொட்டாங், தோணவேபுதைத்ததன்பின் னதிலெதாக்கு த்-தூயவேபட்சமொடு சென்றுவாங்கு, ஆணவேநாளொன்றுக் கொ ருகீற்றப்பா-அருந்தியேபத்தியமா யிருந்திடாயே. கசசு

இருந்திடவேமகோதரமும் விஷநீர்கோவை - இனிதானசலக் கோவை யாம்பற்கௌசி, அருந்திடவேயிவையெல்லாந் தீருஞ்சொ ன்னே - வப்பனேயின்னமொரு விபரஞ்சொல்வேன், பொருந்தியே யெள்ளுப்பூத் தொக்கிளேடு-புகழ்பச்சைக்கருவாடு மாதளையுங்கூட, அருந்தவேயிலையதனை யிடித்துப்பின்பு-அவித்து மூன்றுநாளுண்ண க்கோவைபோமே. கசஎ

* கோவை-சலககோவை.

போமென்ற காய்ச்சலொடுகட்டிகெண்டை-பொருமலோடுஉப் பிசங்கள் போகச்சொல்வேன், தேமென்றசாதிக்காய் கிராம்போடே லம்-திரிகடுகுபெருங்காயம் வெள்ளைப்பூண்டு, வேமென்றகார்போகி கரியசீரம்-விருதானதேசாவரங் கல்லுப்போடு, நாமென்றசவுட்டுப்பு விந்துப்போடு-நவாச்சாரம்வகைசமனாய் நாய்வேளையே. கசஅ

நாய்வேளைச்சாறதனு லரைத்துநன்றாய்-நாள்மூன்றுநிழலுலர்த்தி ப் பின்னுங்கேளு, நீவேளைச்சாற்றினுல் முப்பாலாட்டி-நிழலுலர்த்தி நாள்மூன்றுசென்றபின்பு, ஆயவேயெடுத்துமுன்போற் கல்வத்திட்டு

அச்சாற்றாலாட்டிமுன்போ னிழலுலர்த்தி, தோராவேசூரணமாய்செய்துகொண்டு-துலங்கவேயனுபான மறிந்திணங்கே. கசகூ

இணங்கவேகரப்பானு மேழுமெங்கே-என்மக்காள்பெண்மலடு உண்டோசொல்லு, வணங்கியேயிம்முறைதா னறியார்மாந்தர் - மலடென்றும்பிள்ளையில்லை யென்றுமாய்வார், குணங்களைத்தான்சொன்னேன்வைத்தியரேகேளீர், கூறுகெட்டலையாதீர் குறிப்பாய்பாரீர், குணங்களாமேகவகை யெலலாந்தீரக்-கூறுகிறேனின்னமொரு எண்ணெய்கேளே. கருய

மேகத்துக்குக்கிருதம்.

எண்ணெயாமிளகருணை வெள்ளைச்சாரணைவேர்-இதமானமூந்திரிவேர்முருங்கைவேம்பு-தண்ணவேகுமரிமர வள்ளிசீந்தில்-சலர்திரட்டிகரிசாலை பொன்னுங்காணி,விண்ணவேயமுக்கிரு சங்கங்குப்பி-வெள்ளீண்டுநீர்ப்பூலா வீழியோடு, திண்ணமாம்நிலைப்பனைவேரத்திப்பட்டை-சிறுவிளாவெள்ளறுகு வல்லாரையாமே. கருக

ஆடையாமுடக்கற்றானகத்தியோடு - அப்பனேவகைக்கிரண்டு பலந்தான்சொன்னோம், ஆரையாமகத்துயது சமூலங்கொண்டு-அழகாகநிறுத்திடுவாய் பலந்தான்பத்து, சேரவேநன்றாக இடித்துமைந்தா செல்லுமொருதாழியிலே சலந்தான்கேளு, வேரையான்சீரகமும் பலந்தானெட்டு வெந்தயமோர்பலமெட்டு மதிலேபோடே. கருஉ

போட்டுபதினாறுபடி சலந்தான்வாரு-போக்கோடே யடுப்பேற்றிஎட்டொன்றாக்கி, ஆட்டுநல்லஅடுப்பிறக்கியாரவிட்டு - அழகானகியாழத்தை யிறுத்துவாங்கி, தீட்டியேகிடாழந்தானளவுகண்டு * சிற்றேரண் டெண்ணெய்படிரண்டுவாரு, காட்டியிருள்ளிச்சார் படியிரண்டு காராவின்பாலிரண்டு கல்நாரெட்டே. கருங

* சிற்றேரண்டம்-சிற்றாமணக்கெண்ணெய்.

எட்டானகல்நாரைவஸ்திரகாயம்-இதமாகச்செய்ததிலே போகபோடு, மட்டானராயபுரிச் சர்க்கரைதானெட்டு- வாகாகப்போட்டதிலே கிண்டிக்காய்ச்சி, இட்டமாய்ப்பாலோடு கியாழம்வைத்து- எண்ணெயாய்மெழுகுபதமாகக்கிண்டி, தட்டியேகற்கத்தோ டிறக்கியாறுசாமமிட்டுமூடியேதா னியப்புடம்வையே. கருச

வைத்துமேபட்சமொன்று கழித்துவாங்கு - மைந்தனேநாளுக்கோர்கரண்டி விதம், உயர்த்துமேதினந்தோறும் காண்டோயானல-

ஓடுகிறநோய்களைநீயோர்ந்துகேளு, மெய்த்தொருமேகங்க ளிரண்டுப த்தும்-மேலானகிரந்தியரை யாப்புக்கட்டி, கைத்ததொரு அஸ்திசுரம ஸ்திவெட்டை-கரப்பானொடுசிறங்குசொறி மேகம்போமே. ௧௫௫

மேகமொடுநல்வகையாம் பிரமியங்கள்-வெண்குஷ்டம் தாமரைக ள்மேகவூசல், மேகமூறும்பித்தவாயு உஷ்ணவாயு - மெய்யெரிவுகை எரிவு காலெரிகாந்தல், மேகமாம்வாயுவொடு அண்டவாதம்-மெல்லி யர்கள்கெர்ப்பநோ யேழுந்தீரும், மேகமாமலடிகட்கும் பிள்ளையுண் டாம் விருதானவயித்தியரே விரைந்துபாரே. ௧௫௬

விரைந்துபார்வாதமாஞ்சரீரமானால்-விரும்பித்தேன்தனிலேவெரு க்கிடித்தூள்வை, கரைந்திடவேவுஷ்ணமாஞ் சரீரமானால் - மாசற்றஆ வினெய்தனிலேயூட்டு, கரைந்திடவேகாய்ச்சலொடு கெண்டைகட்டி கலங்கியேயுன்னைவிட் டோடும்பாரு, குறைந்திடவேநோய்களெல்லா ங்கூறிட்டோடும்-குவலயத்தில்கைகண்ட வித்தைபாரே. ௧௫௭

குமட்டிக்காய்த்தயிலம்.

பாரப்பாசருவநோய் வெருவியோடப்-பாடுகிறேன்குமட்டிக்கா ய்த்தயிலந்தன்னைச், சேரப்பாகுமட்டிச்சார்படியிரண்டு- சிற்றேரண் டத்தெண்ணெய்படியிரண்டு, ஆரப்பா ஆடாதோடை படியோரண் டு-அவுரியுடன்திருகுகள்ளிவிழிஞ்சா, வேரப்பாகழற்சிமுடக்கற்றா ன்கூட-வேம்பின்பட்டைச்சாறும் வகையைக்கேளே. ௧௫௮

வகைவகைக்குப்படியொன்று அளந்துவாரு-வாகானவெண்மறி நீர்ப்படிதான்பாதி, தகையானவெருக்கிலிட பழப்புச்சாறு ० சது ரமாக்கள்ளிப்பால் வண்ணமாகும், அகமானவினையெல்லாம் பாண் டத்திட்டு-அடுப்பேற்றிக்குருகிளரும் பருவந்தன்னில், மிகவானதிரிக டுகுதிரிபலாதி-வெண்காரமிந்துப்பு ⁑ விளங்கமாமே. ௧௫௯

* வெண்மறி-வெள்ளாடு ० சதுரமாங்கள்ளி-சதுரக்கள்ளி

⁑ விளங்கம்-வாய்விளங்சம்.

விளங்கமாம்வெண்கடுகு கடுகுரோணி - விருதானகருஞ்சீரகந் தான்கூட, விளங்கவேநவாச்சாரம் சத்திச்சாரம்-மேலானஎவாச்சார ம்வளையலுப்பு, களங்கமாமத்திதிப்பிலியுமூலம்- சல்லானமரமஞ்சள் கன்கல்லுப்பு, அளக்கமாம்வகைவகைக்கு பலமோவொன்று- அப்ப னேகல்வத்தி லரைத்துப்போடே. ௧௬௰

அரைத்துமேகரைத்துக் கியாழங்கறக - மப்பனே யடுப்பேற்றி எரித்துக்காய்ச்சு,வரைத்துமேமெழுகுபத மதனைப்பார்த்து - வடித்

துனிவாங்கியேதான்பதனம், மண்ணுஅரைத்துமேதானியட்டில் வைத்துமூடு-அடைடவாயோர்மண்டலந்தான்சென்றபினைபு அரைத்தோமேநாளொன்றுக் கொருகரண்டி-யுத்தபனேயுண்டுவர வுறுதியாமே.

உறுதியாம்நாள்மூன்று கொள்ளுபத்தியம்-உப்பாகாதாறுநாள் பத்தியங்காரு, இருகியாமேழாநாள் தலைநீர்வார்த்து-எட்டாநாள்மற்றதெல்லாங்கூட்டுகூட்டு, பிறிதியாந்தீருகிற நோயைக்கேளு - பேசகிவாசணுவாயுவென்ற விருபத்தாறும், அறுதியாம்நீராமைமகோதரங்கள்-அஷ்டகுன்மம்பேராம்ப லனைத்தும்போமே. கசஉ

அனைத்தும்போமுறுதியாம் நீர்க்கோவைபோகு - மடல்கட்டிகெளசிமுதல் சென்னடபோகும், மனத்துள்ளேயுறுகோவைபொருமல்போகும்-வயிறுற்றவுப்புசநோம வாடிப்போமே, கனத்தபெண்கட்குற்றகர்ப்ப நோய்களேழும்-கதித்தோட அவன்குளித்த மூன்றுநாளில், தனத்தமுடன்நாளொன்றுக் கொருகரண்டி-தயவாகக் கொடுத்துரைச் சார்புங்கேளே. கசங

சார்பெண்ணாலாநாளாறப்போட்டுத்-தாரமர்மைந்தாநாள் தலைநீர்வார்த்து, சார்பெண்ணசாத்தியொடு ஓமத்தாலே-தானமதுசெய்வித்துக்கிரகசாரம், சார்பெண்ணவிலைவயெல்லார்தீரச்செய்து - தனியேழாநாளிலநாயானைச்சேர, சார்பெண்ண இன்னமொரு சூட்சம்பாரு-தலைமபெறும்வயித்தியரே சாற்றக்கேளே கசச

சாற்றக்கேள்சருவநோயெல்லாந்தீரும் -சார்த்தரசகர்ப்பூரம் விராகனெலு, மாற்றக்கேள்ராங்கிச்சார் முசுமுசுக்கை-வண்சாற்றுலிருசாமம்கருக்குப்போடு, போற்றக்கேள்சுறுக்கிட்ட கர்ப்பூரத்தைத் - பாகழ்ந்தெண்ணெயிற்போட்டுச் சுகமதாக,தேற்றக்கேள் தானியப்புடம்வைநதெடுத்துத்-தேங்காதெசாபத்தை நிவர்த்திசெய்யே. கசரு

செய்யேநீசண்முகற்குங் கணேசருக்குந்-தேவிக்கும்பரமான வடுகனுக்கும், செய்யேநீபூசைமுதலான துவைத்து- சேர்ந்தவைித்தரதுசாபநதீர்த்து, செய்யேநீமனங்களித்து வயித்தியந்தான் - தேசத்தோர்புகழ்வார்கள் வெகுமானங்கள், செய்துமேமகிழ்வார்கள் மைந்தாவுன்னைத், தீராதநோயுண்டோ செப்பக்கேளே. கசசா

பஞ்சலவணபற்பம்.

செப்பக்கேளாய்பூவைசலவணபற்பம்-தெளிவானநாலறிந்தோர்சொல்லார்சொல்லார், மெய்ப்பாகஐந்துவகை லவணமெல்லாம்-விதமானவகைவகைக்குப்பலந்தானென்று, தப்பாமல்கல்வத்தி லோன்

ருய்ப்போட்டுச்-சார்வாகமைபோலப் பொடித்துப்பின்பு,கப்பாகப்பி ரண்டச்சார் * முருங்கைச்சாரும் - கனமானமேனிச்சார் - கொச்சிச் சூரே. ௧௬௭

* முருங்கைச்சார்-முருங்கைபட்டைச்சார்.

சாறானகுமரிச்சார் வகைவகைக்குச்-சாமமொன்றாய்விட்டரைத் துவில்லைதட்டி, வீறாகரவியுலர்த்திப்போட்டிவிட்டு - மேலோடுமூடி யேசீலைசெய்து, கூறாகப்பத்தெருவிற் புடத்தைப்போடு-குணங்கெட் டுலையாதே லவணபற்பம், யாறுமலெடுத்துப்பிங்கானிலிட்டு- வள மானபெருங்காயம் நாலத்தொன்றே. ௧௬௮

ஒன்றாகச்சேர்த்ததிலே நேனைவாரு-உறவுடனேமத்தித்து வை த்துக்கொண்டு, கன்றாயாளொன்றுக்குக் கழஞ்சுவீதம்- நன்மையுட னிருநேரங் கொள்ளுகொள்ளு, குன்றாதவாப்வெங்கே வாதமெங்கே குத்தலொடுகுடைச்சல்வலி கடுப்புச்சூலை, அன்றானவாயுசர்த்திமேக மெல்லா-மண்டவாய்வெல்லாந்தா னகன்றும்பாமே. ௧௬௯

போமென்றவாதமெண் பதுவுஞ்சூலை-புகழானசூலையது விருப த்தாறும், ஆமென்றஅட்டகுன்மங் கிராணியாறு - மந்திரமாம்வாயு வொடுருத்திரவாய்வு, கோமென்றகுண்டலமாம் வாயுவெட்டும்-குட ல்புரட்டோடுஷ்ண முப்பிசமுமந்தம், ஆமென்றவிவ்வகையாம் வியா தியுள்ள-அசையாதமகோதரமு மகன்றும்பாமே. ௧௭0

அரையாப்புகிரந்திசூலை முதலியவற்றிற்குமூலிகை.

அசையாதஅரையாப்புக் கிரந்திக்கெல்லா-மறைகிறேன்மூலிகை யிலப்பாகேளு, திசையாதசங்கங்குப்பி * நாயிலைச்சார் திருகாணகள் ளிச்சார் ஆவின்பாலும், வசையாதநல்லெண்ணெய் சமனாய்க்கொண் டு-மயங்காமய்மூன்றார ளாறுவேளை, நசையாதநேரமொன்று படிகா ல்வீதம்-நல்கிக்கொண்டுவரப் பத்தியங்கேளே. ௧௭௧

* நாயிலை-இலைகள்ளி.

கேளப்பாஆவின்பால் வெள்ளாட்டின்பால்-கெடியானவென்னீ ராமற்றொன்றாகா, ஈளப்பாஏழுநா ளுப்புவறுத்துண்ணு-நலமாகத் தலைமுழுகி யெல்லாங்கூட்டு வேளப்பாஅறையாப்பு * கள்ளிப்பூக்கி ரந்தி - விதமானஅரிக்கிரந்தி சொரிக்கிரந்தி, சூளப்பா பண்புரைகள் கைகால்பிடிப்புச்-சூலைமுதல்ரோகமெல்லாந் தீர்ந்துபோமே. ௧௭௨

* கள்ளிப்பூக்கிரந்தி-கள்ளிப்பூப்போலும் நிறமுள்ளகிரந்தி.

தீர்ந்துபோம்கர்ப்பூரஞ் சேர்த்துக்கொள்ளு-தீருமப்பாவாதமு தல்வாயுசூலை,தீர்ந்துளபாம்பிரமேகம் வெள்ளைவிழ்தல்-தீராதகிரந்தி

